Regd. No. 2975.

ஸ்ரீ:

# SRI RAMANUJAN

Editor: P. B. ANNANGARACHARYA, KANCHEEPURAM-3.

# ஸ்ரீராமாநுஜன் 272

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர்.

வருஷச் சந்தா ரூ. 8.    ஜீவியச் சந்தா ரூ. 58.



பொருளாளன் பெருந்தேவித் தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

## * சதாபிஷேகமலர் *

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி — ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

14-4-1971ல் வெளியிடப்பட்டது.

Rgd. No. 2975 ஸ்ரீராமாநுஜன்

P. B. அண்ணங்கராசார்ய ஸ்வாமிகளின் நூல் துறைகள்.

1. நாலாயிர திவ்யப்பிரபந்தவுரைகள்
2. பூர்வாசார்ய தமிழ்ப்பிரபந்தவுரைகள்
3. ஸகல பூர்வாசார்யஸ்தோத்ர வுரைகள்
4. ஆழ்வாராசார்யப் பிரபாவ நூல்கள்
5. இதிஹாஸ புராண சரித்திர நூல்கள்
6. ரஹஸ்யார்த்த விளக்க நூல்கள்
7. வேதாந்தப் பொருள் விளக்கநூல்கள்
8. வேதலக்ஷணாவிசார நூல்கள்
9. ஸத்ஸம்ப்ரதாயார்த்த விளக்க நூல்கள்
10. லோகாபிராம உபந்யாஸ நூல்கள்
11. பரபக்ஷப்ரதிக்ஷேப நூல்கள்
12. உபந்யாஸக ஸௌபாக்ய வெளியீடுகள்
13. வடமொழி நூல் திரள்கள்
14. ஹிந்தீ பாஷையில்
15. தெலுங்கு பாஷையில்
16. பூர்வாசார்ய க்ரந்த வெளியீடுகள்

விரிவான கேடலாகுகள் தருவித்து விவரங்காண்க.

If un-delivered please return to:

**P. B. ANNANGARACHARYA,**

**KANCHEEPURAM-3.**

Edited and Published by P. B. Annangaracharya Swami
for Madras Satgrantha Prakasana Sabha.

Printed by T. A. P. Srinivasavaradan at Sri Venkateswara Press,
Sannidhi Street. Kanchipuram-3.

Regd. No. 2975.

ஸ்ரீ :

# SRI RAMANUJAN

*Editor*: P. B. ANNANGARACHARYA, KANCHEEPURAM-3.

# ஸ்ரீராமாநுஜன் 272

ஆசிரியர் : P. B. அண்ணங்கராசாரியர்.

வருஷச் சந்தா ரூ. 8. ஜீவியச் சந்தா ரூ. 58.

பொருளாளன் பெருந்தேவித் தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

## ✻ சதாபிஷேகமலர் ✻

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி*
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி*—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி•
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

14-4-1971ல் வெளியிடப்பட்டது.

ஸ்ரீ:

# ஸ்ரீ ராமாநுஜன் - 272.







சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசன ஸபையின் சார்பாக மாதந்தோறும் வெளிவருவது

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 23 | 13—4—71ல் வெளியிட்ட சதாபிஷேகமலர். | ஸஞ்சிகை 8 |
|---|---|---|

## அன்பர்களுக்கு அறிவிப்பு

நமது ஸ்ரீராமாநுஜனுக்கு ஆரம்பமாதம் (ஜனவரி) தை மாதமாகும். கடந்த
ஸௌம்யஸ மார்கழி மாதத்தோடு (1669 டிசம்பர் மாதத்தோடு) இருபத்தொரு
வருடங்கள் பூர்த்தியாகி 197) ஜனவரியில் இருபத்திரண்டாவது வருடம் தொடக்க
மாயிற்று. அதன் பிறகு ஸாதாரணஸ மார்கழி மாதத்தோடு (1970 டிஸம்பர்
மாதத்தோடு) இருபத்திரண்டாமாண்டு பூர்த்தியாயிற்று. அதாவது 264 லக்க
முள்ள ஸ்ரீராமாநுஜனோடு (22) பூர்த்தியாயிற்றென்றபடி. பிறகு 265 லக்கங்
கொண்ட ஸ்ரீராமாநுஜன் இருபத்து மூன்ருவதான (வர்த்தமான) ஸம்புடத்தின்
முதல் இதழாகும், நிகழும் 1971 ஆம் ஆண்டின் ஜனவரி மாதத்துப் பத்திரிகை
யாகுமென்றபடி. [ஸாதாரணவாண்டு தை மாதப் பத்ரிகை யென்க.] அதன்
பிறகு மாசி மாதத்துப் பத்திரிகையின் லக்சம் 266. பங்குனி மாதப் பத்ரிகையின்
லக்கம் 267. இப்போது பங்குனி மாதப் பத்திரிகையாக வெளிவருமிவ்விதழின்
லக்கம் 267. ஆகவேண்டியிருக்க 272 ஆக வெளிவருகின்றது. எனவே
ஸாதாரண வருடத்தில் ஐந்து ஸஞ்சிகைகள் அதிகப்படியாக வெளிவந்தன
வென்றதாயிற்று. இவ்விஷயம் அன்பர்களின் நினைவில் இருக்கவேணுமென்ப
தற்காகத் தெரிவிக்கப்படடதிங்கு. இனிவரப்போகும் ஆவணி மாதத்திற்குரிய
பத்திரிகை இன்று வெளிவருகின்றதென்று கொண்மின்.

ஸாதாரணவாண்டு ஐப்பசித்திருமூல மலராக தமிழ் தெலுங்கு ஸம்ஸ்கிருதம்
ஹிந்தி ஆங்கிலம் ஆகிய ஐந்து பாஷைகளிலும் மணவாளமாமுனிகளின் வைபவ
மும் ததீயதிவ்யக்ரந்த ஸாரார்த்தங்களும் வெளிவருமென்று ஏற்கெனவே நாம்
அறிவித்திருந்தபடி ஐந்து பாஷைகளிலும் பிரசுரங்கள் வெளியிட்டப்பட்டிருக்

கின்றன வென்பதை உலகமுழுவதும் அறிந்துள்ளது. ஆனால் அறியாதவர்களும் சிலரோ பலரோ இருக்கக்கூடும். அன்னவர்கள் தங்கள் விருப்பத்தைத் தெரிவித்துக்கொண்டால் அவர்களுக்கு அனுப்பித்தருவோம். மொத்தமாக எழுதிவிடாமல் இன்ன பாஷையிலுள்ள ஷ வெளியீடுகள் தேவை என்று விளக்கமாகத் தெரிவித்து இரண்டு ரூபா மட்டும் M. O. மூலமாகவோ ஸ்டாம்பு மூலமாகவோ அனுப்பவேண்டும். அவரவர்கள் கடிதங்களை விரிவாகவெழுதிப் பலாப்பிசினாக ஆக்கிவிடாமல் தம்தம் அபேக்ஷையைச்சுருக்கமாக இரண்டொருவரியித் முடிப்பது.

## விசேஷ அறிவிப்பு.

P. B. A. அடியேன் விநயபூர்வகமாக விஜ்ஞாபிப்பது. நான் இளமையிலிருந்து ஒவ்வொருநாளும் (புல்ஸ்கேப் காகித அளவில்) 35 பக்கங்களுக்குமேல் 50 பக்கம் வரையிலும் எழுதிவருகிற வழக்கப்படி இப்போதும் எழுதிவருகிறேன். இதற்குரிய நேத்ரபாடவத்தை எம்பெருமான் குறையற அருளியேயுள்ளான். ஆனால் அச்சுபுத்தகங்களை வாசிப்பதில் இப்போது சிரமம் உண்டாகியிருக்கிறது. ஆவச்யகதைக்கு ஏற்ப சிலஸமயம் சிரமப்பட்டு வாசிப்பதுண்டு. அன்பர்கள் எழுதும் தபால் கடிதங்களை நேராக வாசிக்கமுடியாத நிலைமை விளைந்து ஏழெட்டு மாதமாய்விட்டது. ஆப்தர்கள் வாசித்துக் காட்டியே தெரிந்து கொள்ளவேண்டியவனாய்விட்டேன். ஐந்தாறு காகிதங்களில் எழுதவேண்டிய செய்திகளை ஒரு கார்டில் எழுதப்பழகினவர்களும் சிலருளர். அவர்களுக்கு நாம் விரைவில் விடையிறுக்க முடியாமலிருப்பதை வருத்தத்துடன் தெரிவிதது்க்கொள்ளவேண்டியதாகிறது. நான் நேரில் வாசிக்கவேணுமென்று விரும்பிக் கடிதமெழுதுமன்பர்கள் எழுத்துக்களைக் கொஞ்சம் பெரிதாகவும் விட்டு விட்டும் எழுதினால் நேரில்வாசித்து விடையிறுக்க இயலும். இக்கோரிக்கையை நாம் சில மாதங்களுக்கு முன்னமே சில அன்பர்களுக்குத் தபால் மூலமாகத் தெரிவித்திருக்கிறோம். இப்போது எல்லாருமறிய இங்குத் தெரிவித்தோமானோம். நம்முடைய இதரபாஷைப் பத்திரிகைகளிலும் இது தெரிவிக்கப்பட்டுள்ளது. ... ... ... *

## மற்றோர் அறிக்கை.

விசேஷித்து ஒரு ஸம்வத்ஸரகாலமாக நாம் அச்சிட்டுவரும் நூல்கள் முதற்பதிப்பாகப் பலவும், மறுபதிப்பாகப் பலவு முண்டு; இவற்றைப் பெருப்பாலும் (ஜ்யேஷ்டஜாமாதா) ஸ்ரீமதுபயவே. அக்காரக்கனி. தி. அ. ஸம்பத்குமாராசாரியர் ஸ்வாமி கவனித்துவருகிறார். திருநெடுந்தாண்டக வியாக்கியானமும் திருப்பாவை மூவாயிரப்படி யாறாயிரப்படி வியாக்கியானங்களும் மதுரையில் அச்சிடுவிக்கப்பட்டன; இன்னமும் சில நூல்கள் அங்கே அச்சிடப்பட்டு வருகின்றன. அவற்றின் சோதனங்கள் அவ்விடத்துப் பண்டிதர்கள் மூலமாக அங்கேயே யாகவேண்டியதாயிற்று. அவற்றில் ஏதேனும் பிழைகள் கண்டால் அறிஞர்கள் திருத்திக் கொண்டு நமக்கும் தெரிவிப்பது. ... ... ... ... *

# நமது சிறு யாத்திரைச் செய்திகள்

அடியேனுடைய வாழ்நாளில் வடநாட்டு க்ஷேத்ர தீர்த்த யாத்திரை பலகால் ப்ராப்தமாகி யிருக்கின்றது. ஹரித்வார ஹ்ருஷீகேசம் வரையில் இருபத்திரண்டு பர்யாயமும், மூன்று பர்யாயம் ஸ்ரீபதரிகாச்ரம ஸேவையும் நேர்ந்திருக்கின்றது. 1958 ஆம் ஆண்டிற்குப் பிறகு அசக்திமிகுதியினுல் தூரதேசப் பயணத்தைப் பெரும் பாலும் நிறுத்திக்கொள்ள நேர்ந்தது. ஆயினும் இடையிடையில் இரண்டு மூன்றுவிசை ஹரித்வாரம் டில்லி ப்ருந்தாவனம் மட்டும் சென்று வரநேர்ந்ததுண்டு. இப்போது இச்சிறு யாத்திரையிலுண்டான குதூஹலத்தின் காரணத்தை முன் னிதழில் குறிப்பிட்டிருந்தேன். ஆண்டாள் 'மன்னு மதுரை தொடக்கமாக வண்டுவராவதி தன்னளவும் செய்தருளின மாநஸிகயாத்திரையை' வண்துவராபதி தொடக்கமாக மன்னுமதுரை யளவாகச் செய்யவிரும்பி அன்பர்கள் பதினவருடன் 8—3—71ல் புறப்பட்டேன். மனோரதித்தபடியே நிறைவேறப்பெற்று 27—3—71ல் பேரருளாளன் திருவடிவாரம் வந்துசேர்ந்தேன். பல ஆப்தர்களின் கோரிக் கையை நிறைவேற்ற யாத்திரைச் செய்தியைச் சுருங்க விஜ்ஞாபிக்கிறேன்.

முதன் முதலாக பாம்பே (Bombay) நகரம் சேர்ந்து அவ்விடத்தில் அஸ்மதா சார்ய் ஸ்ரீஜகத்குரு காதிஸ்வாமியின் சாச்வதகீர்த்தி விஜயத்வஜமான (பனஸவாடி) திருவேங்கடமுடையான் ஸன்னிதியை ஸேவிக்கப்பெற்றோம். இந்த தேவஸ்தான ப்ரதிஷ்டாபகரான ஸ்ரீஸ்வாமி திருநாட்டுக் கெழுந்தருளி முப்பத்தைந்து வருஷ மாகிறது. அதன்பிறகு இந்த ஸன்னிதியின் ஸன்னிவேசமும் கைங்கர்யவைகரி களும் பலவகையில் முன்னேற்றமடைந்திருக்குமதிசயத்தைக் கண்டு வியப்பு முவப்பு முண்டாயிற்று. அதன்மேல் இந்நகரில் பரிசிதர்களாயிருந்தவர்களைக் கண்டு பேசிக்களிக்க வாய்ப்பு நேர்ந்தது. அன்னவர்களில் ஒரு மூவரைமட்டும் இங்கு ப்ரஸ்தாவிக்கிறேன்.

(1) 'பூலேச்வர படாமந்திர்' என்கிற மஹத்தான ஸ்தானத்திற்குத் தலைவரான ஸ்ரீமான் கோஸ்வாமி தீக்ஷிதாசாரி யென்பவர் நாற்பது வருடங்களுக்கு மேலாக நமக்கு நண்பர். இவர் நாநாதர்சனக்ரந்தங்களில் விமர்சகுசலராய் விளங்குபவர். சிறந்த வித்வான். வ்ரஜமநோஹரனென்கிற இவருடைய குமார னும் மஹாமேதாவியாய் வித்வானுமாய் விளங்குபவன். இவர்களுடைய ஸமாகம மும் ஸம்பாஷணமும் பரமஸந்தோஷாவஹமாக வாய்த்தது. (2) இரண்டாவதாக, ப்ரபாஸ க்ஷேத்ரத்திற்கு அருகிலுள்ள குராஸா என்னும் ஸ்ரீவைஷ்ணவாச்ரமத் திற்கு உத்தராதிகாரியாய் மிகச்சிறந்த ஸம்ஸ்க்ருத பண்டிதராய் விரக்தாக்ரே ஸரரான தேவக்ருஷ்ணசாரி யென்பவர் (பாம்பேயில் வாழ்பவர்) சந்தித்துப் பேசின பேச்சுக்கள் "ப்ரபஞ்ஜநதநய பாவுகபாஷித ரஞ்ஜிதஹ்ருதய!" என்கிற ரகுவீரகத்ய வாக்யத்தை நினைப்பூட்டின, (3) மூன்ருவதாக, உலக மெங்கும் பரவிய பல்லாயிரக்கணக்கான ஸம்ஸ்க்ருத ஹிந்தீ புத்தகங்களைப் பதிப்பித்துப்

பெரும்புகழ் பெற்றவரும், எனது இளம்பிராய நூல்களை அப்போதே அச்சிட்டவரு மான ஸ்ரீமான் கேமராஜ ஸேட்டின் ஸ்ரீவேங்கடேச்வரா ஸ்டீம் பிரஸ் என்னும் அச்சுக்கூடத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டேன். மேலே குறித்த கேமராஜ ஸேட்டுக்கு இருபுதல்வர்கள். இருவரும் சிலபல வருடங்களுக்கு முன்னமே காலகதி யடைந்தனர், அவர்களும் எனது நூல்கள் சிலவற்றை யச்சிட்டு வெளி யிட்டவர்கள். அவர்களில் ஒருவனான ஸ்ரீ நிவாஸனென்பவனுடைய அத்விதீய புத்திரனான முரலீதரபஜாஜ் என்பவன் இப்போது மிகச்சிறந்து வாழ்பவன். இவன் இளைஞனாயினும் பகவத் பாகவதாசார்ய கடாக்ஷவிசேஷம் பெற்று அச்சுக்கூடத்தை மிகவும் பிரபலப்படுத்தி பித்ரு பிதாமஹர்கள் செய்துவந்த புஸ்தக ப்ரகாசனத்தை யும், ஸ்ரீவேங்கடேச்வரஸமாசார் என்கிற (ஹிந்தி) வாரப்பத்ரிகைப் பிரசுரத்தையும் மிக மேம்பட்ட முறையில் செய்து போருகிறான். இந்த ஸமாசார பத்ரிகை அறுபது எழுபது வருடங்களுக்கு மேலாக நடைபெற்று வருவதென்பது இங்குக் குறிப்பிடத் தக்கது. பாம்பே நகரத்திலுள்ள புஸ்தக ப்ரகாசன நிலயங்களுக்குள் இந்த நிலயம் மிக மேம்பட்டது. ஸ்ரீ வைஷ்ணவஸம்ப்ரதாயஸ்தர்களில் மிக்க பெரும் புகழ்படைத்த இக்குடும்பத்திற்கு மனமுவந்து மங்களாசாஸனம் செய்து அன்று மாலையே த்வாரகாபிமுகமாகப் புறப்படலாயிற்று.

'த்வாரகா க்ஷேத்திரங்கள் ஐந்து' என்பர்கள். கோமதீத்வாரகை, (அத னருகேயுள்ள) பேடீத்வாரகை, டாகோர்த்வாரகை, ஸ்ரீநாதத்வாரகை, கங்க்ரோலீ த்வாரகை என்பன அவை. ஸுதாமாபுரியென்றும் குசேலபட்டண மென்றும் ப்ரஸித்தமாய் போர்பந்தர் எனவழங்கப்படுமிடத்தையும் சேர்த்து ஆறுத்வாரகைகள் என்பாருமுண்டு. இவை யெல்லாம் ஸ்ரீக்ருஷ்ணபரமாத்மா அடிக்கடி உலாவி அடிச்சுவடுதந்து புனிதமாக்கின ஸ்தல விசேஷங்களென்று சொல்லக் கேட்டிருக் கிறோம். இவ்விடங்களுக்குப் பலகால் சென்றிருக்கிறேன். இப்போதையாத்திரை யில அவகாசக்குறைவினால் டாகோர்த்வாரகை, ஸ்ரீநாதத்வாரகை, கங்க்ரோலீ த்வாரகை என்னும் மூன்று திவ்ய ஸ்தலங்களை மட்டுமே ஸேவிக்க நேர்ந்தது.

பாம்பே நகரத்திலிருந்து இந்த ஸ்தலங்களுக்குச் செல்லும் வழியிடையில் பரோடா (Baroda) நகரமுள்ளது. இங்கு க்ஷேத்ர தீர்த்தவிசேஷ மொன்றுமில்லை யாகிலும் இங்கு சிரபரிசிதராய் விளங்குபவரும் ப்ரபல வல்லபாசார்ய பீடஸ்தரும் மஹாபண்டிதருமான ஸ்ரீ கோஸ்வாமி வ்ரஜபூஷணாசார்ய ரென்பவருடைய கோரிக்கையின்படி இந்நகரில் இறங்கி ஒரு வேளை தங்கியிருக்கலாயிற்று. வல்லபா சார்ய பீடஸ்தர்கள் குஜராத்தில் பலவிடங்களில் மிகமிக ப்ரதிஷ்டிதர்களாய் விளங்குகின்றார்கள். அவர்களும் அவர்களது சிஷ்ய வர்க்கங்களும் க்ருஷ்ண பக்தியே வடிவெடுத்தவர்கள். அவர்கள் வைத்துக்கொள்ளும் பெயர்கள்யாவும் க்ருஷ்ண பக்தியைக் காட்டுமவையாயும் பரமவிலக்ஷணமாயுமுள்ளன. நம்மவர்கள் ரங்காசார்யர் ராகவாசார்யர் வரதாசார்யர் வேங்கடாசார்யர் நரஸிம்ஹாசார்யர் நாராயணாசார்யர் க்ருஷ்ணமாசார்யர் கேசவாசார்யர் கோவிந்தாசார்யர் கோபாலா சார்யர் ஸ்ரீநிவாஸாசார்யர் ஸ்ரீரங்காசார்யர் பாஷ்யகாராசார்யா பாவநாசாரியர் சடகோபாசாரியர் சிங்கராசாரியர் ஸுந்தராசார்யர் ஸுதர்சநாசார்யர் .... என் றிங்ஙனே திருநாமங்கள் சாத்தப் பெறுகிறார்கள். அங்குள்ளவர்களோவென்றால்

வ்ரஜவிஹாரீ வ்ரஜமோஹன் வ்ரஜபூஷண் வ்ரஜேச் யுகளகிசோர் நந்த கிசோர் நந்தநந்தன் ச்யாமஸுந்தர் ராதாரமண் கோபீநாத் கோபீவல்லப் ... ... என்றிப்படிவைத்துக்கொள்ளும் பெயர்கள் அளவுகடந்தவை. ஸ்ரீ க்ருஷ்ணனை யல்லது வேறு தெய்வத்தை யறியார்களிவர்கள். திருவரங்கம் பெரிய கோயிலை வருணிக்கும் பட்டர் "மார்க்கே மார்க்கே பதிகநிவஹை: உஞ்ச்யமாநாபவர்க்காம்" என்றருளிச் செய்கிறார்; திருவரங்கத்தின் வழிதோறும் மோக்ஷத்தைப் பொருக்கி யெடுக்கலாமென்கிறார். அதுபோல இந்த க்ருஷ்ணபக்தர்கள் நடக்கும் வழிகள் தோறும் ஸ்ரீ க்ருஷ்ணபக்தியைப் பொறுக்கியெடுக்கலாமென்றே தோன்றிற்று. அவ்விடத்துப்பெண்களும் பாடுகின்ற ஸ்ரீ க்ருஷ்ணகீதங்கள் நெஞ்சை நீர்ப்பண்ட மாக்குவன. ஸ்ரீஜயந்தீஸமயத்தில் அந்த ப்ராந்தங்களில் சென்று உலாவிக் கொண்டிருக்கவேணுமென்றே தோன்றிற்று. அங்கு நாங்கள் போயிருந்ததினம் ஹோளிப்பண்டிகை யென்கிற மஹோத்ஸவதினம். அன்றைய நிகழ்ச்சிகளெல்லாம் க்ருஷ்ணபக்தி பரீவாஹங்களே யென்று ஒரேசொல்லில் சொல்லிமுடிக்கிறேன்.

அன்று மாலையே டாகோர் சென்று ஸேவிக்கலாயிற்று. இது வொரு விலக்ஷணமான திவ்யஸ்தலம். ஸன்னிதியெதிரே கடல் போன்ற தடாகம். பரதமந்திரம் என்கிற ஸ்ரீவைஷ்ணவ மஹாமந்திரத்தில் மோஹன தாஸ் என்கிற மஹா பண்டிதரான மஹந்த் (நமக்கு நெடுங்காலமாக நண்பர்) ஸன்னிதிக்கு உடன் வந்திருந்து க்ருஷ்ண பகவத் தர்சனத்தை ஆச்சரியமாகச் செய்வித்தார். இங்கு நடைபெறும் பகவதுபசார ப்ரக்ரியைகளையும் பக்தர்களின் ப்ரேம ப்ரகர்ஷங் களையும் பார்க்கும்போது ச்வேதத்வீபமென்கிற விடம் இது தானே! என்று தோன்றிற்று. எவ்வளவெழுதினாலும் த்ருப்தியே யுண்டாகாது.

அங்கிருந்து ஸ்ரீநாதத்வாரகை சென்றோம். திருவல்லிக்கேணியை வருணிக் கின்ற திருமங்கையாழ்வார் "மன்னுதண்பொழிலும் வாவியும் மதிளும் மாட மாளிகையும் மண்டபமும்" என்றருளிக் செய்ததை நினைவூட்டும் தலமிது. இங்கு நான் பலகால் சென்றிருக்கிறேனெனினும் ஒவ்வொரு பர்யாயத்திலும் நவம் நவமாகவே காட்சி தருகின்றது. இங்கு மிகப் பெரிய தர்ம சாலைகள் இருபத்து மூன்று. கண்ட விடமெங்கும் நடைவாவிகள். அருகே ஆற்றுப் பெருக்கு. கடை வீதிகளோ கண் கொள்ளாக் காட்சி. ஸன்னிதியின் விஸ்தாரம் மனங் கொள்ள முடியாதது. ஸ்ரீக்ருஷ்ண பரமாத்மாவின் ச்ருங்கார அலங்காரங்கள் க்ஷணந்தோறும் மாறி மாறிக் காட்சி தருமழகு நமது நாட்டிலுள்ள எந்த திவ்ய தேசத்திலும் காண முடியாதது. இங்கு ஸன்னிதியில் ஸம்ஸ்க்ருத பண்டிதர்கள் பலர் ப்ரவசனங்கள் செய்து போருகிறார்கள். அவர்களுள் ஆனந்தீலால் என்கிற பண்டிதர் எனக்கு நீண்டகாலமித்திரர். அவருடைய கோரிக்கையின்படி ஸன் னிதியின் திருமுற்ற வெளியில் "கோதூளி தூஸரித கோமலகேச வேசம் கோபால பாலக சதைரநுகம்யமாநம், ஸாயம் ஸ்வயம் ப்ரதிக்ருஹம் பசுபந்தநார்த்தம் கச்சந்த மச்யுதசிசும் ப்ரணதோஸ்மி நித்யம்." என்கிற ச்லோகத்தை ஹிந்தியில் உபந்யஸித் தேன். இங்கே இரண்டிரவு தங்கியிருந்து ஒருவாறு த்ருப்தியடைந்தோம்.

இங்கிருந்து கங்க்ரோளீத்வாரகை ஏழெட்டு மைல் தூரத்திலுள்ளது. இந்த ஸ்தலம் நாம் இதுவரை ஸேவிக்கப் பெற்றதில்லை. இதம்ப்ரதமமாகவே ஸேவிக்க ப்ராப்தமாயிற்று. இந்த மந்திரம் பரோடாவில் ப்ரஸ்தாவிக்கப் பட்ட வ்ரஜபூஷணுசார்யருக்கு ஸர்வஸ்வாதீனமான மந்திரமாதலால் அவர் முன்னுடியே இங்குள்ள கார்யஸ்தர்களுக்குத் தெரிவித்திருந்து எதிர்பாராத விசேஷச் சிறப்புகள் செய்வித்தார், மந்திரத்தின் மாண்பு இவ்விடத்திலேயே நித்யவாஸம் செய்யலாமா! என்னுந் தோற்றத்தை விளைத்தது. இங்கும் ஸ்ரீக்ருஷண பரமாத்மாவின் ப்ரபாவ ப்ரகர்ஷமேயல்லது வேறில்லை. இந்த ப்ராந்தங்களை நமது தேசத்தவர்கள் அடியோடு தெரிந்து கொள்ளாமலிருக்கிறார்களே யென்கிற நிர்வேத முண்டாயிற்று. இவ்விடங்களுக்குத் திருமங்கையாழ்வாரெழுந்தருளியிருப்பராகில் இத்தலங்களுக்கு மட்டுமே ஆயிரக்கணக்கான பாசுரங்கள் பாடியிருப்பர். இவ்விடத்தை விட்டுப் புறப்பட மனமில்லாமலே புறப்படலானும்.

இங்கிருந்து மீண்டும் நாதத்வாராவுக்கே சென்றோம். அங்கிருந்து டில்லி வழியாய் ஹரித்வாரம் ஹ்ருஷீகேசம் போக வேண்டியிருந்தது. மார்வார்ஜங்ஷன் ஸ்டேஷன் வழியாய்ப போகவேண்டும். 1958ல் செய்த யாத்திரையில் அந்த வழியாய்ச் சென்றபோது பிரபலமான ரைல்விபத்துவிளைந்து நான் புநர்ஜன்மம். பெற்றதை அப்போதைய ஸ்ரீராமாநுஜனில் விரிவாக வரைந்திருந்தேன் அதைப் பல நண்பர்கள் இன்னமும் மறவாமலேயிருக்கின்றார்கள். நமக்கும் அது நினைவுக்கு வரும்போதே ரணரணக முண்டாகிறது. அதனால் அந்தவழியிற் செல்லாமல் உதயபூர் வழியாக டில்லியைக் கடந்து ஹரித்வாம் சென்று சேர்ந்தோம்.

ஹரித்வாரமென்பது பூலோக வைகுண்டமல்லவா? இவ்விடத்தில் விரஜையினும் வீறு பெற்ற கங்கையின் கரையில் எமக்கு "ஸ்வக்ருஹே கோ விசாரோஸ்தி" என்னும்படியாக ரம்யமான ஹாம்யங்கள் மூன்று உண்டு. எத்தனை காலமு மெத்தனை யூழியும் வஸித்தாலும் கேள்வியில்லை; எந்த விசாரமும் விளையாது. நம் பேரருளாளனை மறக்க முடியுமானல் "அத்ரைவ ஸ்ரீரங்கே ஸுகமாஸ்வ" என்றாப்போலே "அத்ரைவ ஹரித்வாரே ஸுகமாஸ்வ" என்றருள் பெற்று விடலாம். திருமங்கையாழ்வார்க்குத் திருப்புல்லாணியை மறக்க வேணுமென்று தோன்றிற்று; "ஏது செய்தால் மறக்கேன் மனமே!" என்றார்; என்ன பண்ணினல் திருப்புல்லாணியை மறக்கலாம்! என்று ஆலோசித்தார்; ஒன்று தோன்றிற்று; புல்லாணிக்கே சென்று அங்குறையும் பெருமானை நோக்கி 'உன்னை மறக்க உபாயஞ்சொல்லு' என்று கேட்போம் என்று தோன்றிற்று; "மனமே! தொழுதுமெழு புல்லாணியே" என்றார். அதே போல நாமும் பேரருளாளனை மறக்கும் வழியைப் பேரருளாளனிடமே வந்து கேட்டுத் தெரிந்து கொள்வோமென்று ஹ்ருஷீகேசம் லக்ஷ்மணஜுலாவரைக்கும் சென்று வதரியை நோக்கிக் கைதொழுது திரும்பினோம்.

20—3—71ல் டில்லிமா நகர் வந்து சேர்ந்தோம். சென்ற ஸம்வத்ஸரத்தில் அங்கு நூதனப்ரதிஷ்டையாகியுள்ள ஸ்ரீராமமந்திர மென்னும் அதிமநோஹர

ஸந்நிவேசமுடைய ஸன்னிதியில் (டில்லிப் பெரியார்கள்) வஸதி அமைத்திருந்த படியால் அங்குத் தங்கினோம். மறுநாள் அவ்விடத்து நிகழ்ச்சிகளை நமது பரமாப்த ரான ஸ்ரீமான் A. ராமாநுஜாசாரியர் B. A. தம்முடைய வியாஸத்தில் விளக்கி யிருப்பதனால் அதை விட்டு மேல் நிகழ்ச்சியை யெழுதி முடிக்கலாகிறது.

அங்கிருந்து விருந்தாவனம் சென்றோம். 15-3-71 முதலாக அவ்விடத்தில் ஸ்ரீரங்க மன்னருக்கு ப்ரஹ்மோத்ஸவம் நடைபெற்று வருகிறது. அதனைப்பூர்த் தியாக அநுபவிக்க வேணுமென்னுமாசையோடுதான் புறப்பட்டது. ஆனாலும் மூன்று நாட்களே அங்கு அநுபவிக்க ப்ராப்தமாயிற்று. இம்மஹோத்ஸவவைகரி யைப்பற்றி எத்தனை ஏடுகளெழுதினாலும் பர்யாப்தி பிறவாது. நம் தேவப்பெருமா ளுடைய வைகாசித் திருநாளை ஸேவிக்க வருங்குழாம் ஏகதேச மென்னும்படியாக அந்த ப்ராந்தத்திலுள்ள பக்த ப்ருந்தங்கள் இடையறாது வந்து ஸேவிப்பதும் விலக்ஷணவாத்ய நாதமும் எங்குங் கண்டறியாத வாண வேடிக்கைகளும் "பார் விண்ணீர் முற்றுங் கலந்து பருகினும் ஆர்வனோ!" என்று ஆழ்வாரருளிச் செய்த படியிலே முடிக்கத் தக்கவை.

இவ்வளவோடு யாத்திரை முற்றுப் பெற்றதென்னலாம். முடிவாத மதுரை யில் வந்துதானே சேரவேண்டும். அங்கு நான் இதுகாறும் பலகால் சென்றிருந் தாலும் அங்குள்ள த்வாரகாதீச மந்திர மொன்று மட்டுமே ஸேவித்திருந்தது. ராஜாதிராஜ மந்திர மென்று ஒன்றிருப்பதை இதுவரையறியேன். அதுவும் கண்ணபிரானுடைய ஸன்னிதியே. வாசலில் நோக்கினால கடைதான் தெரியும். அவ்விடத்துத் தலைவர்கள் நமது வருகையை யறிந்து விரும்பியழைத்ததனால் உள்ளே புக நேர்ந்தது "எம்பெருமானுடைய விபூதிவிஸ்தாரம் இவ்வளவா!" என்று விளைந்த வியப்பை என் சொல்வல்லே னென்வாய் கொண்டே? வண்துவ ராபதி தொடக்கமாய் மன்னுமதுரையளவான யாத்திரை இவ்வளவில் முற்றிற்று.

# மதுரேண ஸமாபயே.

மதுரையில் புறப்பட்டு மறுநாள் விஜயவாடாவில் [க்ருஷ்ணாநதீதீரத்தில்] தங்கி மறுநாள் ஸ்வஸ்தானம் வந்து சேரலாயிற்று. வைகுண்டவாஸியான ஸ்ரீமதுபயவே. (தேவனார்விளாகம்) பருத்திப்பட்டு திருவேங்கடாசார்யஸ்வாமி அடியேனுக்கு இளமைதொடங்கியே பரமஸ்நிக்தர். அவருடைய தௌஹித்ரனும், ஸ்ரீமதுபயவே. வில்லூர் ஆசுகவி ஸ்ரீநிதிஸ்வாமியின் புத்ரரத்னமுமான ஆயுஷ் மாந் கருணாகரன் அபர்யாப்தாம்ருதசர்மா விருந்தாவனத்தில் வந்திருந்தான். லௌகிக கார்யமாக ஒருவேளை டில்லிக்குப் போயிருந்து திரும்பி மதுரையிலிருந்து நமது பயணத்தில் ஸஹாந்வயம் கொண்டான். நாலைந்து மணிகாலத்துக்குமேல் ஸஹாஸிகையும் ஸம்பாஷணமும் பெற்றான். குறள் பிரமசாரி யென்னும்படியான நிலைமை. ஆங்கிலப்படிப்பு, லௌகிக வ்ருத்தி. எனினும் வைதிக வழியொழுக்கம் விலக்ஷணமானது. உபயவேதாந்தநூல்களில் பரிசயமும் அபிநிவேசமும்சிறந்திருக்

கின்றது. நல்ல ஞாபக சக்தியோடும் ராஸிக்யத்தோடுங் கூடிய வாக்மி. மேன்மேலும் அபிவிருத்தியடையக் கூடியவனென்று ஹார்தமாக ஆசாஸித்தேன். "புத்ராதிச்சேத் பராஜயம்" என்பதொன்றுண்டு; இச்சேத் என்னுமளவில் நில்லாமல் ருச்சேத் என்னுமளவுமாயிற்றுஸ்ரீநிதிஸ்வாமிக்கு. அடியேனுடைய ஸம்பந்தியாய்க் கோயிலில் வாழும் ஸ்ரீஸூக்திரத்நாகர, இளையவில்லிஸ்வாமியையும் உடன் நினைத்தேன். பிதாக்களுக்கு இதுவொரு விலக்ஷணபாக்யமன்றோ.

இந்த யாத்திரையில் மிகுந்த உத்ஸாஹத்துடன் அந்வயித்த அன்பர்கள்—(அடியேனுடைய சிறிய மாப்பிள்ளை) ஸ்ரீ. உ. வே. மணவாள திருமலாசாரியர்; ஸௌபாக்யவதி சிறிய குமார்த்தி; அகரம் கண்ணமாசாரியரென்கிற இராகவாசாரியர்; அவருடைய திருக்குமாரரான R. வரதாசாரியர்; அவருடைய திருத்தாயார்; D. கிருஷ்ணமூர்த்தி ஐறங்கார் (Editor of Free India), ஸ்ரீமான். ராணிபேட்டை ஸம்பந் நரஸிம்ஹாசாரியர், அருடைய மூத்த குமாரரும் தேவியாரும், உயர்திருவாளர்களான M. ஏகாம்பர பாகவதர், V. N. தேவநாத பாகவதர், A. V. கன்னைய பாகவதர், அவருடைய நண்பர்களான இரு பாகவதர்கள் ஆகிய இவர்கள். இவர்களெல்லாருமடைந்த பேரின்பமே எனது ப்ரஹ்மானந்தம். ... ... *

— இதி ஸர்வம் ஸமஞ்ஜஸம் —

---

# கண்ணுவும் அண்ணுவும் பேசினவை.

அன்பர்களே! நம்முடைய மனோபாவனையில் நேர்ந்ததொரு ~~ஸல்லாப~~ ஸம்வாதமிது' இதனை எவ்வண்ணமாகவேனும் நினைத்துக்கொண்மின். நாவல்கள் படிக்கிற புடையிலே படித்தாலுமழகியதே.

## வ்ரஜபூமிகளில் கண்ணுவுக்கும் அண்ணுவுக்கும் நிகழ்ந்த ஸம்பாஷணை

அண்ணு ;— கண்ணு! உன்னைக்காண நேர்ந்தால் பலவிஷயங்கள் கேட்க வேணுமென்று நெடுநாளாக நினைத்திருந்தேன்; "கண்காண நிற்கில் ஆணையிட்டு விலக்குவர்களென்று கண்ணுக்குத் தோற்ருதபடி நின்று" என்று ஸ்ரீவசன பூஷணத்தில் ஸாதித்தபடி கண்ணுக்குத் தோற்ருமலே யிருந்ததனுல் இதுகாறும் வினவ வாய்க்காமல் போயிற்று; இன்று கண்டமையால் கண்ணிணைகள் களிப்பக் களித்துக் கேட்கிறேன்; ஆர்ஜவத்தோடு சொல்லுவையா?

கண்ணு — ஏராளமாகக்கேள்; தாராளமாகச் சொல்லுகிதேன்.

(இந்த சுவைமிக்க கட்டுரையை அடுத்த இதழில் எதிர்பார்த்திருங்கள்.)

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.

ஆழ்வாரெம்பெருமானுர்ஜீயர் திருவடிகளேசரணம்.

# எண்பது விஷய விஜ்ஞாபனம்

(ஸ்ரீகாஞ்சீ, அண்ணங்கராசார்யதாஸன்)

## — முன்னுரை —

நிகழும் ஸாதாரண ஸம்வத்ஸரத்தின் பூர்த்தி நாளும் அடியேனுடைய எண்பது பிராயப் பூர்த்தி நாளும் ஒத்திருப்பதனுல் இந்த ஸந்தர்ப்ப விசேஷத்தை முன்னிட்டு எண்பது விஷயங்களை விஜ்ஞாபிக்க வேணுமென்று ஆசை கிளர்ந்தது. அடியேனுடைய வாழ்க்கைவரலாறுகளைச் சிறிது விஜ்ஞாபிக்கும் வியாஜத்தினுல் அடியேன்பால் அருள் கொண்ட பெரியோர்களின் பெருமைகளையும், அடியேனது மதிப்புக்குரிய சீரிய பண்டிதர்கள், ப்ரவக்தாக்கள், மஹநீயர்கள், நண்பர்கள், உற்றுருறவினர்கள் முதலானுருடைய சிறப்புக்களையும் வெளியிட்டு இம்முகத்தால் அவரவர்கள்பால் க்ருதஜ்ஞதை செலுத்துவது; அடியேன் இளமை தொடங்கி வடமொழி தென்மொழி நூல்களில் ஆராய்ச்சி செய்து வெளியிட்டுள்ள நூற்றுக்கணக்கான விஷயங்களில் முக்கியமாகத் தோன்றும் சிலவற்றைப் பொறித்துவைப்பது—ஆகிய இவையே இவ்வெண்பது விஷய விஜ்ஞாபனத்தின் முக்கியமான குறிக்கோளாகும். பெரியார்களின் திருவடிகளைச் சிந்தனை செய்துகொண்டு விஜ்ஞாபிக்க எழுகின்றேன். இஃது ஒருவிதமான தன்சரிதைச் சுருக்கம். எண்பது விசேஷார்த்த விஜ்ஞாபனமென்கிற பிரசுரமும் இத்துடன் வெளிவரக் காண்பீர். ... .... ...



## — அடியேனுடைய தாய்தந்தையர் —

1. ஸ்ரீமத் அண்ணு ரங்காசாரியர் ஸ்வாமி யென்பார் அடியேனுடைய திருத்தகப்பனுர். காஞ்சீபுரியில் தென்னண்டை மாட வீதியில் வாழ்ந்து வந்தார். அவர் சிறந்த கல்விக்கடலாகவும் வேதாந்த வித்யாநிதியாகவும் விளங்கியவர். அவரிடத்துக் கல்விகளைப் பயின்று தேறிய பண்டிதர்கள் பலர். தந்தையார் என்னுடைய பதினுன்காவது வயது நிரம்பின ஒரு வாரத்திற்குள் க்ரோதிஹு பங்குனித் திங்களில் திருநாட்டுக் கெழுந்தருளினர். திருத்தாயார் அலர் மேல் மங்கையம்மா.

தேவப்பெருமாளது கீழண்டை கோபுரவாசலில் விளங்கும் அழகிய மணவாள ராமாநுஜ ஜீயர்ஸ்வாமி மடத்தில் நாற்பது வருஷகாலம் ஆஸ்தானமலங்கரித் திருந்த ஷஷ்டிஜீயர் ஸ்வாமியென்று ஸுப்ரஸித்தரான ஸ்ரீமத் பரமஹம்ஸ அழகிய மணவாள ராமாநுஜ ஜீயர் ஸ்வாமியே அடியேனுக்கு மாதாமஹர். ஸ்வாமியின் பூர்வாச்ரமஜ்யேஷ்ட புத்ரியே எனது திருத்தாயார். ஒரு மாதுலரும் சிறியதாயார் களிருவருமிருந்தனர். திருத்தகப்பனர் நாற்பத்துமூன்று திரு நக்ஷத்ரமே இவ்விபூதி யில் வாழ்ந்தார். இப்போதெழுந்தருளியிருந்தால் 108 திருநக்ஷத்ரமாகும்.

## — ஸ்ரீகாஞ்சியில் ஸம்ஸ்க்ருத வித்யாலய ப்ரஸ்தாவம் —

2. அக்காலத்தில் தேவப்பெருமாள் ஸன்னிதி வீதியிலுள்ள வானமாமலை மடத்தில் நடந்துவந்த ஸம்ஸ்க்ருத பாடசாலையில் திருத்தந்தையார் காவ்யநாடகா லங்காரங்களுக்கும் திவ்யப்ரபந்தத்திற்கும் உபாத்யாயராக இருந்து வந்தார். அப்போது அப்பாடசாலையில் 150 வித்யார்த்திகள் ஸம்ஸ்க்ருத பாடங்கள் பயின்று வந்தார்கள். காஞ்சியில் ஸுப்ரஸித்த வித்வத் ஸார்வ பௌமராக எழுந்தருளி யிருந்த ஸ்ரீமத் திருமலை அனந்தாண்பிள்ளை (குன்றபாக்கம்) ஸ்ரீநிவாஸாசாரியர் ஸ்வாமியின் தலைமையில் அப்பாடசாலை நடந்து வந்தது. அடியேனுடைய திருத் தகப்பனர்க்கு உபயவேதாந்த க்ரஹணமும் அந்த ஸ்வாமி ஸன்னிதியிலேயாயிற்று. திருத்தகப்பனர் சிறு பிராயத்திலிருந்தே "ஸ்காலித்யே சாஸிதாரம்" என்கிற ஆசார்ய லக்ஷணத்தைக் கைக்கொண்டு, வயதில் பெரியவர்களுக்குங்கூட ஆசாரத்தை நிர்தாக்ஷிண்யமாக சிக்ஷிக்குமவராயிருந்தபடியால், சிறியார் பெரியாரென்கிற வாசி யில்லாமல் யாவருமே அவரிடத்தில் அஞ்சி நடுங்கிக்கொண்டிருந்த நிலையை நேரில் அநுபவித்திருக்கிறேன். வானமாமலை மடத்துப் பாடசாலையில் திருத்தகப்பன ரோடுகூட உபாத்யாயர்களாக எழுந்தருளியிருந்தவர்கள் பதின்மரென்று ஞாபகம் வருகிறது. அதுவொரு நல்லடிக்காலம். எனது எட்டாவது வயதுமுதல் பதினே ராவது வயது வரையில் இப்பாடசாலையின் அநுபவம் எனக்கு விசேஷமாக இருந்தது. அப்போது ஆங்கில கலாசாலை சின்னகாஞ்சீபுரத்தில் அடியோடு இல்லாமலிருந்ததனுல் இந்த ஸம்ஸ்க்ருத வித்யாசாலை அப்போது மிகச் சிறப்பாக விளங்கிற்று. காலை மாலைகளில் பாடசாலை விடும்போது கிழக்குமுகமாகத் திரும்பிப் போகிற வித்யார்த்திகளும் மேற்கு முகமாகத் திரும்பிப்போகிற வித்யார்த்திகளும் பெருந்திரளாகக் காணப்படுவர்கள். அந்தக் காட்சி இற்றைக்கும் அடியேனுடைய உள்ளத்திற் பதிந்திருக்கின்றது. அடியேனுடைய 11, 12 வயதில் இப்பாடசாலை என்ன காரணத்தினுலோ நின்றுவிட்டது. அப்போது தேவப்பெருமாள் ஸன்னி திக்குள் வஸந்தோத்ஸவ மண்டபத்தில் 'சடகோப நிலயம்' என்கிற ஸம்ஸ்க்ருத பாடசாலை நடந்துகொண்டிருந்தது. அதிலும் 40, 50 வித்யார்த்திகள் வாசித்துக் கொண்டிருந்தார்கள். காவ்ய நாடகாதிகளும் சதுச்சாஸ்த்ரமும் பாடம் நடந்து வந்தது. அந்த ஸமயம் காஞ்சீபுரி ப்ரபல ஸம்ஸ்க்ருத வித்யாபீடமாக விளங்கிற்று.

## — அடியேனுடைய இளமைக்கல்வியும், இளமைக் கவிதையும் —

3. திருத்தகப்பனர் பரமவைதிகராகையாலே அடியேனுக்கு சௌலம் உபநயனம் முதலியவற்றை ப்ராப்த காலங்களிலேயே செய்வித்தார். திருத்தகப்ப

னூர்க்கு கிடாம்பி கிருஷ்ணமாசாரியர் ஸ்வாமீ யென்றொரு மாதுலர் சென்னையி லிருந்தார். அவர் அதிககாலம் காஞ்சியிலேயே எங்கள் க்ருஹத்திலேயே இருப்பர். அவருக்கு க்ரந்தம் தமிழ் தெலுங்கு நாகரி ஆங்கிலம் முதலிய பல லிபிகளில் நல்ல பரிசயமிருந்தது. அவர் நாலாறுமாத காலத்தில் ஸகலலிபிகளிலும் அடியேனுக்குப் பயிற்சியை யுண்டாக்கி வைத்தார். சப்தமஞ்ஜரி, ஸ்ரீராமாயண ஸங்க்ரஹம், ஸமாஸகுஸுமாவளி முதலிய பால பாடங்களைத் திருத்தகப்பனாரே வெகு ஆஸ்தை யுடன் நடத்தினர். ஸ்ரீராமாயண ஸங்க்ரஹம் வாசித்து முடிக்குங் காலத்தில் எந்த வார்த்தைகளையும் ஸம்ஸ்க்ருதத்திலேயே சொல்லவேண்டியதென்று அடியேனுக்குக் கட்டளையிட்டார் திருத்தகப்பனர். அடியேன் இளம் பிராயத்தி லேயே ஸம்ஸ்க்ருத வியாஸங்கள் எழுத ஆரம்பித்தேன். அக்காலத்தில் மலையா ளத்தில் பட்டாம்பியென்னுமூரிலிருந்து விஜ்ஞாந சிந்தாமணி யென்கிற ஸம்ஸ் க்ருத பத்ரிகை வாரந்தோறும் வெளிவந்து கொண்டிருந்தது. அது என்னுடைய 25 வயது வரையில் நடந்து வந்தது. பன்னிரண்டாம் வயதிலேயே அதற்கு வியாஸங்கள் எழுதியனுப்ப ஆரம்பித்தேன். ஸமஸ்யைகள் கொடுப்பது, ஸமஸ்யாபூர்த்திகள் செய்வது, சித்ரப்ரச்நங்கள் கொடுப்பது, பிறர்கொடுக்கும் சித்ரப்ரச்நங்களுக்கு உத்தரங்கள் வெளியிடுவது—இப்படிப்பட்ட லேகனங்களிலும் ஆஸக்தியுண்டாயிற்று. அப்போது ஆசுகவியென்றும் சித்ரகவியென்றும் சில பிருதுகளை அந்த விஜ்ஞாநசிந்தாமணி பத்ரிகையின் ஸம்பாதகரான புன்னச்சேரி நீலகண்ட சர்மாவென்கிற வித்வான் அப்பத்ரிகையில் வெளியிட்டிருந்தார். ஒரு நாள் திருத்தகப்பனர் ஓர் மறைபொருள் வினவைச் சொல்லி அதற்கு விடையளிக் கும்படி நியமித்தார்; அந்த வினவை மூன்று ச்லோகங்களாக இயற்றி விடையை ஒரு ச்லோகத்தினல் வெளியிட்டேன். வின என்னவென்றல், ஒரு குளத்தில் சில தாமரைகள் மலர்ந்திருந்தன. அவற்றில் உட்காருவதற்காகச் சில கிளிகள் ஆவ லோடு அங்கு வந்து சேர்ந்தன; ஒவ்வொரு மலரில் தனித்தனி ஒவ்வொரு கிளியாக உட்கார வேண்டியதென்று எண்ணி அப்படியே அக்கிளிகள் உட்காரப்பார்க் கையில் ஒரு கிளிக்குமட்டும் தாமரைப்பூ கிடைக்காமற் போகவே அது வருந்திக் கிடந்தது; அதைக்கண்ட மற்ற கிளிகள் உடனேயெழுந்து ஒவ்வொரு மலரில் இரண்டிரண்டு கிளி வீதம் உட்கார்ந்தன. அப்போது ஒரு தாமரைப்பூ (கிளி உட் காராதபடிக்கு) மிச்சப்பட்டு விட்டது; எததனை கிளிகள் வந்தன? குளத்தில் எத்தனை தாமரை மலர்கள் இருந்தன? என்று வின; இந்த வினவுக்கு விடை— நான்கு கிளிகள் வந்தன; மூன்று மலர்கள் இருந்தன என்பது.

இவ்வினவிடைகளை அடியேன் ச்லோகங்களாக்கின விதம் வருமாறு:—

(வின ச்லோகங்கள் மூன்று)

சுகா: கேசித் கஸ்மிம்ச்சந ஸரஸி பாதோஜகுஸுமேஷு
அவஸ்தாநம் ப்ராப்தும் ஸகுதுகமுபாகத்ய ஸரஸீம்,
ப்ருதக் சைகைகஸ்மிந்நபி கமல ஏகைகசுக இதி
அமீ ஸங்கல்ப்யைவம் ப்ருதகுபவிசந்திஸ்ம ஸஹஸா.

ததச்சைகம் கீரம் கமலகுஸுமாலாபஜகுசா
விஷண்ணம் வீக்ஷியைதே ஸரபஸமதோத்தாய ஸகலாः,
ந்யஷீதந் ப்ரத்யப்ஜம் சுகயுகள ரீத்யா தததுபோ!
அபூதேகம் பத்மம் சுகசரணவிந்யாஸவிதுரம்.

அயி போஸ் ஸுஹ்ருதோ ப்ருத கதி கீராஸ் ஸமாகதாः?
கமலாநி ச ஸந்திஸ்ம கியந்தி கமலாகரே?

(இந்த வினுவுக்கு விடையிறுத்த ச்லோகம்)
சுகாச் சத்வார ஆயாதாः, கமலத்ரிதயம் ஸ்திதம்
இத்யேவமுத்தரம் ஸாது த்ரஷ்டவ்யமிஹ பண்டிதைः.

இங்ஙனே பலபல வெழுதினேன் பதின்மூன்ருவது வயது முதலாக.

— உபாத்யாயர்களின் ப்ரசம்ஸைகள் —

4. வானமாமலை மடத்துப் பாடசாலை நின்று போன பிறகு சில மாதங்கள் அகத்திலேயே திருத்தகப்பஞரிடமே வாசித்துக்கொண்டிருந்தேன். பிறகு தேவப் பெருமாள் ஸன்னிதிக்குள் நடந்துகொண்டிருந்த முன்னம்ப்ரஸ்தாவித்த பாடசாலையில் சேர்ந்து வாசிக்கத் தொடங்கினேன். ராமசந்த்ராசார் என்கிற மாத்வ பண்டிதர் அப்போது அங்கு ப்ரதம உபாத்யாயராக இருந்து வந்தார். அவருடைய போதநாசக்தி மிகவும் ஆச்சரியமானது. பாடங்களை மறுபடியும் சிந்தனை செய்ய வேண்டாதபடி பாடம் சொல்லிக்கொடுப்பவர் அவர். அவரிடத்தில் வாஸவதத்தா, காதம்பரீ முதலான கத்ய க்ரந்தங்களை ஏழெட்டு மாதகாலம் வாசித்தேன். அப்போது ஸ்ரீமத் காதி அனந்தாசார்ய ஸ்வாமி அஸ்மத்குல கூடஸ்தரான ப்ரதிவாதி பயங்கரம் அண்ணு ஸந்நிதியில் வேதாந்த வைஜயந்தீ என்னும் பெயரால் ஒரு ஸம்ஸ்க்ருத பாடசாலை ஸ்தாபித்தார். அது மூன்று நான்கு வருஷகாலம் நடைபெற்றது. அதில், மேலே சொன்ன ராமசந்த்ராசாருடைய கநிஷ்டப்ராதாவான வித்யாசார் என்பவர் தலைமை யுபாத்யாயராக நியமிக்கப்பட்டிருந்தார். (காஞ்சியில் உத்தமாச்ரமியாயிருந்த) புதுப்பேர் இளையவில்லி வேங்கடாசார்ய ஸ்வாமியும் ஓர் உபாத்யாயராக நியமிக்கப்பட்டார். அவரிடத்தில் ஸித்தாந்த கௌமுதீபாடமும், வித்யாசார் என்கிற மாத்வ வித்வானிடத்தில் சம்பூ நாடக அலங்காரக்ரந்தங்களின் பாடங்களும் நடந்து வந்தன. இப்பாடசாலைக்கு ஸ்தாபகரான ஸ்ரீமத் உவே. காதி அனந்தாசார்ய ஸ்வாமியும் ப்ரதாநோபாத்யாயஸ்தானத்தை யலங்கரித்து நியாய பாடங்களை ஆரம்பம் செய்தருளினர். தர்க்க ஸங்ரஹம் ஆரம்பித்து வாதக்ரந்தங்கள் வரையில் அந்த ஸ்வாமி ஸன்னிதியில் அதிகரிக்க ப்ராப்தமாயிற்று, என்னுடைய பதினன்காவது வயது முடிந்தவுடனே திருத்தகப்பஞர் திருநாடலங்கரித்தபடியால் அதுவரையிலுள்ள செய்திகளைச் சுருங்கத் தெரிவிக்கிறேன்.

— திருத்தகப்பஞருடைய ப்ரவசனவிசேஷங்கள் —

5. மேலே சொன்ன வேதாந்த வைஜயந்தீ பாடசாலை ஸ்தாபித்தபோது திருத்தகப்பஞரே அதன் நிர்வாஹ பாரங்களை ஏற்றுக்கொண்டு மிகச் சிறப்பாக

நடத்தி வந்தார். அப்போது இப்பாடசாலை மிகவும் உன்னதமான ஸ்திதியிலிருந்து வந்தது. ஐம்பது வித்யார்த்திகளுக்குமேல் வாசித்து வந்தார்கள். 7, 8 மாதங் களுக்குள் திருத்தகப்பனார் திருமேனி பாங்கின்மையால் வெளியில் நடையாட முடியாமல் திருமாளிகையிலேயே யெழுந்தருளி யிருக்க நேர்ந்துவிட்டது. மறுபடி யும் வெளி ஸஞ்சாரமின்றியிலே [இரண்டு ஸம்வஸ்த்ரகாலம்] திருமாளிகையி லேயே யிருந்து திருநாட்டுக்கெழுந்தருள நேர்ந்தது. அந்த இரண்டு ஸம்வத்ஸர காலத்தில் ஒரு ஸம்வத்ஸரம் பூர்த்தியாக திருமாளிகையிலே வித்யார்த்திகளை வரவழைத்து காவ்ய நாடகாலங்கார பாடங்களை நடத்திக்கொண்டிருந்தார். பாடசாலைகளில் நடப்பது போலவே வகுப்புவாரியாகத் திருமாளிகையில் பாடங்கள் நடந்துவந்தன ஸ்ரீவைஷ்ணவர்கள் மட்டுமல்லாமல் ஸ்மார்த்த மாத்வர்களும் வந்து வாசித்துக்கொண்டிருந்தார்கள். அப்போது எனக்கு சிசுபாலவதகாவ்ய பாடம் நடக்கிறது. மேல் வகுப்பில் சிலர் நைஷதம் முதலியன வாசிக்கிறார்கள். அதற்கும் மேல் வகுப்பில் சிலர் அநர்க்கராகவம் [முராரி நாடகம்] வாசிக்கிறார்கள். க்ருஹத்திலேயே பாடம் நடப்பதால் இதரர்கள் பாடம் வாசிக்கும்போதும் நான் கூடவே உட்கார்ந்திருப்பேன். திருத்தகப்பனார் கல்லும் கரையும்படி பாடம் சொல்லுகிறவராகையால், எவ்வளவு பெரிய ச்லோகங்களாயிருந்தாலும் வாசிக்கும் போதே கண்டபாடமாய் விடும். நைஷதம் வாசிக்கிறவர்களோடும் முராரி வாசிக் கிறவர்களோடும் யான் கூடவேயிருந்து பாடம் கேட்டுக்கொண்டிருப்பது வழக்க மாகையால் அந்தப் பாடங்களில் வரும் ச்லோகங்களும் எனக்குப் பெரும்பாலும் கண்டபாடமாய் விடும்.

## — அக்காலத்தில் பெற்ற பரிசு —

6. இப்படி யிருக்கையில், மைஸூரில் பண்டிதரத்னமென்று ப்ரஸித்தரான ஸ்ரீமத் கஸ்தூரி ரங்காசாரியர் ஸ்வாமி திருமலை யாத்திரையாக வெழுந்தருளினவர் காஞ்சீபுரிக்கும் விஜயம்செய்திருந்தார். அவரோடுகூட மைஸூர் அரசாங்கத்து அதிகாரிகளும் சிலர் வந்திருந்தார்கள். தேவப்பெருமாள் ஸன்னிதிக்குள் நடந்து வரும் சடகோப நிலய பாடசாலையில் ஒரு நாள் பரீக்ஷாஸதஸ்ஸு நடத்தினார் கள். அப்பாடசாலையில் வாசிக்கிற வித்யார்த்திகளை மட்டுமல்லாமல் பிறவிடங்க ளில் வாசிக்கிற (ஸம்ஸ்க்ருத) வித்யார்த்திகளையும் வருவித்துப் பரீக்ஷை நடத்தி னார்கள். அதற்கு அடியேனும் போயிருந்தேன். உத்துங்கவித்யார்த்திகளைத் தனி யாகவும் கீழ்வகுப்பு வித்யார்த்திகளைத் தனியாகவும் உட்காரவைத்துப் பரீக்ஷை நடத்தி வருகிறார்கள். முராரி நாடகத்தில் பரீக்ஷை நடந்து கொண்டிருக்கிறது. அதில் முதல் அங்கத்தின் முடிவிலுள்ள "யதீந்தோரந்வேதி வ்யஸநமுதயம் வா நிதிரபாம்" என்கிற சுலோகத்தில் ஓர் உத்தமவித்யார்த்தி பரீக்ஷை செய்யப்படுகிறார்; அவர்க்கு ச்லோகமே உபஸ்திதியில்லை. அதனால் அவர் மிகவும் சிரமப்படுகிறார். அப்போது சிறுமாணுக்கர்திரளில் உட்கார்ந்திருந்த யான் "அதை நான் சொல்லுகி றேன்" என்றேன். பரீக்ஷகரான கஸ்தூரி ஸ்வாமி "சொல்லப்பா! பார்ப்போம்" என்றார். உடனே யெழுந்து அந்த ச்லோகத்தைப் பூர்த்தியாகச் சொல்லி அர்த்த மும் தாத்பரியமும் விரியச்சொல்லி முடித்தேன் அப்போது "காவ்ய பாடம்

வாசிக்கிற உனக்கு இந்த ச்லோகம் எப்படி தெரிந்தது?" என்று கஸ்தூரி ஸ்வாமி கேட்டார். "என் க்ருஹத்தில் எனது தகப்பனுரிடத்தில் பலபேர்கள் வாசிக்கிருர் கள்; அவர்களில் முராரி நாடகம் வாசிப்பவர்களு முண்டு; அவர்கள் வாசிக்கும் போது நான் கூடவிருந்து கேட்டுக்கொண்டிருப்பது வழக்கம்; அதனுல் தெரிந்தது" என்றேன். 'அவரவர்கள் வாசிக்கிற எல்லா க்ரந்தங்களிலும் நீ பரீக்ஷை சொல்லு வாயா? " என்று கேட்டார்; "அனேகமாய்ச் சொல்லுவேன்; கேட்டுப் பார்க்க லாமே" என்றேன். பிறகு மற்ற வித்யார்த்திகளை விட்டுவிட்டு என்னை மட்டும் விசேஷமாகப் பரீக்ஷித்தார்கள். அவர்கள் த்ருப்தி யடையும்படியாகவே சொல்ல இயன்றது. பிறகு பரீக்ஷிதர்களுக்கு ஸன்மானம் செய்யும்போது, ஒரு ரூ. இரண்டு ரூ. உத்தரீயம், புத்தகம்.........இப்படியாகக் கொடுத்தார்கள். அடியேனுக்கு இரண்டு பவுன் கொண்ட டாலர் ஒன்று கொடுத்தார்கள். அதைக்கொண்டு தாய் தந்தையர் எனக்குத் தங்கவளை செய்வித்துக் கரபூஷணம் போட்டார்கள். அதை யான் 26, 27 வயது வரையில் அணிந்துகொண்டிருந்தேன். அதனுல் "தங்கக் காப்பு அண்ணு" என்றே எனக்குப் பெயர் வழங்கி வந்ததப்போது. காவ்ய நாடக அலங்காரக்ரந்தங்களை எனக்கு மேல்வகுப்பினர்கள் வாசிக்கும்போதுகளில் உட னிருந்து கேட்டது, பிறகு அந்த க்ரந்தங்களை யெல்லாம் தனியாகவும் வாசித்தது ஆகிய விவற்ருல் அடியேனுக்கு காவ்ய—சம்பூ—நாடக அலங்கார க்ரந்தங்களின் உபஸ்திதி அதிகமாகவுண்டாயிற்று; இடையில் பலவருஷங்கள் அவற்றை ஸ்மரிக்க வும் ப்ரஸக்தியில்லாமலிருந்துங்கூட இற்றைக்கும் அவற்றின் உபஸ்திதியைப் பெரும்பாலுமுடையேன். இவ்விஷயத்தில் அடியேன் மூவரிடத்தில் தினந்தோறும் க்ஷணந்தோறும் உபகாரஸ்மிருதி செலுத்திக்கொண்டிருக்கிறேன் ; 1. திருத்தகப்ப ஞர், 2. (மாத்வ) ராமசந்த்ராசார் ; 3. அவருடைய ஸஹோதரர் வித்யாசார் ஆகிய இம்மூவரும் என்னுடை நித்ய க்ருதஜ்ஞதா பாத்ரபூதர்கள்

## — திருத்தந்தையாருடைய ப்ரசம்ஸைகள் —

7. திருத்தகப்பனுருடைய ஆழ்ந்த வ்யுத்பத்தியும் ஞாபகசக்தியும் அப்ர திமமானது, அபரிமிதமானது. பாடஞ்சொல்லுகிற ஸமயம் போக இதரஸமயங் களிலுங்கூட அநேகக்ரந்த ஸம்பந்திகளான பல விஷயங்களையுரைத்துக்கொண்டே யிருப்பர். அந்த கால விசேஷங்களை நினைக்கும்போதெல்லாம் " தே ஹி நோ திவ ஸா கதா:" என்கிற பவபூதியின் ச்லோகம் நினைவுக்கு வந்து கண்ணீர் பெருகும். வேறெங்குங் கேட்கமுடியாத விநோதகதைகளையும் விசேஷமாக ஸாதிப்பர் தகப்ப ஞர். அவருடைய அநுபவம் எனக்குப் பதினுன்கு வயது வரைக்குமே யிருந்தாலும், "எந்தையிராப்பகலோதுவித்துப் பயிற்றி" என்று பெரியாழ்வாரருளிச் செய்ததுபோல ஒருக்ஷணங்கூட அவர் என்னை யகலவிடாமல் இரவும் பகலும் அருகேயேவைத்துக் கொண்டிருந்து "பணிமானம் பிழையாமே அடியேனைப் பணிகொண்ட" என்று (திருவாய்மொழியில்) நம்மாழ்வார் ஸாதிக்கிறபடி சிக்ஷித்தருளின விதங்கள் வாசா மகோசரம். திருத்தகப்பனுர் அடியேனுக்குக் கற்பித்த ஸ்தோத்ர பாடங்கள் எண் ணிறந்தவை; முதலில் வேதாந்த தேசிக ஸ்தோத்ரங்களை யெல்லாம் கற்பித்தார். பிறகு ஆளவந்தார் ஆழ்வான் பட்டர் முதலான ஸகலாசார்ய ஸ்தோத்ரங்களையும்

கற்பித்தார். இவற்றைப் பின்மாலைவேளையிலும் இரவிலும் சொல்லிக் கொடுப்பது வெகு அற்புதமாயிருக்கும். அப்போது அச்சுப்புத்தகமில்லை; எழுதிக்கொடுப்பர். திவ்யப்ரபந்தங்களில் பெரும்பாகம் திருத்தகப்பனாரிடத்திலேயே அதிகரித்தேன். அவர் திருநாடலங்கரிப்பதற்குச் சில மாதங்கள் முன்னமேதான் அடியேனுக்குத் திருவிலச்சினை [சக்ராங்கனம்] ப்ரஸாதித்தருளினார்; அதனால் திருவாய்மொழியாயிரம் ரஹஸ்யங்கள் இவை. வேறு ஸ்வாமிகளிடம் ஓதப்பட்டன.

— திருத்தகப்பனாருடைய அநாரோக்யாபிவிருத்தி —

8. 1904 க்ரோதிஹு மாசி மாதத்திலிருந்து திருத்தகப்பனாருடைய திருமேனியில் கிலேசம் அதிகரிக்கவாரம்பித்தது. ஆனாலும் அவருடைய நித்ய கர்மாநுஷ்டானங்களுக்கு ஸ்வல்பலோபமும் நேர்ந்ததில்லை; அவர் த்வாதசோர்த்வ புண்ட்ரமணியாமல் ஒருநாளுமிருந்ததில்லை. அவருடைய திருமேனி ஸ்வர்ணச் சாயையை வென்றிருக்கும். அவர் திருப்பரிவட்டம் தரிக்குமழகும் பன்னிருநாமம் அணியுமழகும் நிகரற்றது என்னலாமத்தனை. அவர் திருவீதியில் நடந்தெழுந்தருளும்போது கண்டால் ஸ்வர்ண விக்ரஹமொன்று கைகால்முளைத்துச் செல்லுகிற தென்பர். க்ரோதிஹு மாசிமாத முடிவில் திருமாளிகையிலுங்கூட ஸஞ்சரிக்க முடியாதபடி அசக்தி அதிகரித்தது. அவர் அஜாதசத்ருவென்று ப்ரஸித்தராகையாலே அந்த நாட்களில் தென்கலையார் வடகலையார் ஸ்மார்த்தர் மாத்வர் என்கிற வாசியின்றிக்கே அனைவரும் இரவும் பகலும் நமது க்ருஹத்திலேயே படுகாடு கிடப்பர்கள். அந்த ஸமயத்திலும் திருத்தகப்பனார் தமது ஸமீபத்தில் வருமவர்களை ஆசார விசாரங்களில் நிர்தாக்ஷிண்யமாக சிக்ஷிப்பர். தம்மிலும் வயோவ்ருத்தர்கள் பலர் இருப்பர்களே; அவர்கள் ரங்கஸாமி என்று ஏகவசனமாகச் சொல்லுவர்களானாலும் எதிரே நிற்க நடுங்குவர்கள். அந்த சரமஸமயத்தில் ஏறக்குறைய ஒருமாத காலம் அல்லும் பகலும் அடியேனை அருகிலேயே வைத்துகொண்டு ஸாதித்த உபதேசமொழிகள் அனேக சாஸ்த்ரார்த்த கர்ப்பிதங்களாய் சரமஸந்தேசமென்னத் தகுந்தவை; ஒவ்வொன்றும் மறக்க முடியாமலிருக்கின்றன. ஸ்ரீரங்கத்தில் பத்தராவி ஸ்வாமியென்று ஒரு மஹாபுருஷர் எழுந்தருளி யிருந்தார்; அந்த ஸ்வாமி ஜ்ஞாநாநுஷ்டானங்களில் மிக ப்ரஸித்தர்; திருத்தகப்பனாருக்குப் பரமாப்தர்; அநாரோக்யத்தை யறிந்து நேரில் பார்ப்பதற்காகக் காஞ்சிக்கு வந்து நமது க்ருஹத்திலே தங்கியிருந்தார்; அந்த ஸ்வாமி மறுநாள் காலை தேவப்பெருமாள் ஸன்னிதிக்குச் சென்று ஸேவிக்க விரும்பினார்; அப்போது திருத்தகப்பனார் அடியேனையழைத்து ஸன்னதிக்குப்போய் என்ன ஸமயம், பார்த்துவா' என்று நியமித்து அனுப்பினார். அடியேன் போய் அவ்விடத்தில் தென்பட்ட மணியகாரரை நோக்கி என்ன ஸமயமென்று விசாரிக்க, அவர் 'ஆராதனம் ஆகப்போகிறது' என்றார், அகத்துக்கு வந்து ஆராதனமாகப்போகிறதாமென்றேன்; திருவாராதனமென்று சொல்லாமல் ஆராதனமென்று சொன்னதற்காக உடனே; முதுகு பிளந்து விட்டது. இதைக்கண்ட அந்த பத்தராவி ஸ்வாமி லகுவான அபராதத்திற்கு இவ்வளவு குருவான சிக்ஷையா?' என்று, வியந்தார். அந்த ஸமயம் அந்த பத்தராவி ஸ்வாமி ஐந்தாறுநாள் எழுந்தருளியிருந்தார்; அப்போது அடியேனுக்கு கத்யத்ரயம்

ஸந்தையாகாமலிருந்தது; அந்த ஸவாமி ஸன்னிதியில் அதிகரிக்கும்படி தகப்பனுர் நியமித்தருள அவரும் பரமக்ருபையோடு நித்யமும் இரண்டு ஸந்தை ஸாதித்தருளினுர். மற்றும் பல நல்வார்த்தைகளும் ஸாதித்தார்.

## — திருத்தகப்பனுர் திருநாடலங்கரித்தல் —

9. திருத்தகப்பனுர் பரமபதிப்பதற்குமுன்னே ஐந்துநாள் அடியோடு ஞாபகமேயில்லாமலிருந்தார். திருநாட்டுக்கெழுந்தருளுகிறவன்று காலை ஆறுமணி முதல் 12-மணி வரைக்கும் நல்ல ஞாபகமும் படபடவென்று பேசுகிற சக்தியும் பெற்று அடியேனுக்கு சரமஸந்தேசங்கள் அநுக்ரஹிக்க ஆரம்பித்தார் அடியேனுக்கு மட்டுமன்று; அங்குக் குழுமியிருந்த அனைவர்க்கும் "யதாதிகாரம் நெறியெல்லாமெடுத்துரைக்கிருர்" என்று ஆசார்யஹ்ருதயத்தில் ஸாதிக்கிறபடி அவரவர்களுக்குத்தக்கவாறு ஆச்சரியமான ஸந்தேசங்களை ஸாதித்தருளி அடுத்த க்ஷணத்திலேயே ப்ரஜ்ஞாபங்கமடைந்தார். இரண்டு நாழிகைக்குள் இவ்விபூதியை விட்டகன்ருர். அந்த ஸந்நிவேசம் பலர்க்கும் ஆச்சரியமாயிருந்தது. அக்காலத்தில் சிஷ்ய ஸஞ்சாரமாக வடநாட்டிலெழுந்தருளியிருந்த ஸ்ரீமத் காதிஸ்வாமி யாத்திரையை முடித்துக்கொண்டு காஞ்சிக்கு வந்துசேர நாலாறுமாதமாயிற்று; அப்போது எங்களுக்கு ஜமீனுக இருந்த திருவடிராயபுரம் என்கிற சுரோத்திரிய க்ராமத்தை கவனித்துக்கொள்ள என் தாயாரும் மாதுலரும் பெரும்பாலும் க்ராமத்திலேயே வாஸமாயிருந்தார்கள். என்னுடைய க்ருஹத்தில் ஸஹோதரிகள் பிதாமஹியின் ஸம்ரக்ஷணையில் இருந்து வருகிருர்கள். நான் மட்டும் ஸ்ரீமத். காதி ஸ்வாமி திருமாளிகைக்கு ஸ்வீகார குமாரன் போல் சென்று சேர்ந்து அங்கேயே அசநசயனுதிகளைவைத்துக் கொண்டு. அப்போது அஸ்மத்குலகூடஸ்தர் ஸன்னிதியில் நடந்து கொண்டிருந்த வேதாந்த வைஜயந்தீ பாடசாலையிலும், தேவப்பெருமாள் ஸன்னிதிக்குள் நடந்துகொண்டிருந்த சடகோபநிலய பாடசாலையிலும் சாஸ்க்ரபாடங்கள் வாசித்துக் கொண்டிருந்தேன்.

## — ஸ்ரீகாதிஸ்வாமியோடு அநுயாத்திரை —

10. அப்போது ஸ்ரீகாதிஸ்வாமி சிஷ்யப்பிரார்த்தனையால் ஹைதராபாத்—ஸீதாராம் பாக் எழுந்தருள வேண்டியதாயிற்று. அப்போது அடியேனும் "நீத: ப்ரீதிபுரஸ்க்ருத:" என்னுங்கணக்கிலே உடன் விடை கொள்ள நேர்ந்து ஏறக்குறைய ஒரு ஸம்வத்ஸரம் அங்கே வஸிக்க நேர்ந்தது. ஸீதாராம்பாக் என்னுமிடம் மிகப் பெரிய தோட்டம். "மன்னு தண் பொழிலும் வாவியும் மதிளும் மாடமாளிகையும் மண்டபமும்" என்னும்படி மிகவும் ரமணீயமான ஸந்நிவேசம். அங்கே தேவப் பெருமாள் ஸந்நிதியில் உத்ஸவங்கள் மிக விலக்ஷணமாக நடந்து வந்த காலம். ஒரு வருஷகாலம் நம் தேவப்பெருமாளையும் மறந்து இருக்கப் பண்ணிற்றென்ருல் பேசத்தானுவதுண்டோ? அப்போதைய நிலைமைகளை அடியேன் அடிக்கடி நினைப்பதுண்டு. அப்போது ஸ்ரீகாதிஸ்வாமிக்கு நிர்ப்பந்தமான ஒரு காரியமும் கிடையாது. இரவு ஒன்பது மணிக்கு மேல்தான் நகரத்திலிருந்து சிஷ்யர்கள் வந்து வார்த்தையாடுவர்கள். பகல்முழுவதும் இரண்டொருமணி காலந்தவிர மற்ற போதெல்

லாம் ஸ்வாமியை விட்டுப் பிரியாமே வாழ நேர்ந்த காலம் அது. சாஸ்த்ரபாடம் வாசிப்பதோடுகூட ஸ்வரூப க்ரந்தங்களையும் ஸேவிக்கத் தொடங்கும்படி நியமன மாயிற்று, திருமந்த்ரார்த்த காலக்ஷேபமும் தாத்பர்ய சந்திரிகையோடு கீதாபாஷ்ய காலக்ஷேபமும் அங்கேதான் ப்ராப்தமாயிற்று அவ்விடத்தில் இதரர்களோடு பேசி னுல் ஹிந்தியிலும் தெலுங்கிலும் பேசவேண்டியிருந்தபடியாலே அவ்விரண்டு பாஷைகளிலும் பரிசயம் ஏற்பட்டது அவ்விடத்திலேதான். அந்த ஸமயம் காதி ஸ்வாமியோடுகூட அவ்விடம் விடை கொள்ள நேர்ந்ததானது அடியேனுடைய பலவகை க்ஷேமங்களுக்கு மூல காரணமாயிற்று.

— மாதாமஹ ஜீயர்ஸ்வாமியைப் பணிந்து பெற்ற பேறுகள் —

11. அந்த ஸமயத்தில் காதி ஸ்வாமி சிஷ்யப்ரார்த்தனையினுல் கல்கத்தா ப்ராந்தம் எழுந்தருள நேர்ந்ததனுல் அடியேன் காஞ்சிக்குத் திரும்பி வந்துவிட நேர்ந்தது. அப்போது மாதாமஹஜீயர் ஸ்வாமி மடத்தில் காலை வேளைகளில் ஸ்ரீவசநபூஷணுதி ரஹஸ்ய காலக்ஷேபமும் மாலை வேளைகளில் பகவத்விஷய கால க்ஷேபமும் சிறக்க நடந்துகொண்டிருக்கிறது. காஞ்சீவாஸிகளான சில ஸ்வாமிகள் ஸேவித்துக்கொண்டிருக்கிருர்கள். அடியேனும் அந்த கோஷ்டியில் அந்வயித்து ஸேவிக்க ஆரம்பித்தேன். அப்போது பதினேழாவது வயது நடந்து வருகிறது. ஜீயர்ஸ்வாமி தமிழ்ப் பண்டிதரென்று ஸுப்ரஸித்தர்; பூர்வாச்ரமத்தில் தேவப்பெரு மாள் ஸன்னிதிக்குள் நடந்துகொண்டிருந்த சடகோபநிலய பாடசாலையில் பல வாண்டுகள் தமிழ் உபாத்யாயராக எழுந்தருளியிருந்தவர். இலக்கண இலக்கியங் களில் ஜீயர்ஸ்வாமியின் பாண்டித்யம் அபரிமிதமானது. அக்காலத்தில் (பூர்வாச்ர மத்தில்) வடகலையார் தென்கலையார் பல பேர்கள் ஸ்வாமியிடத்திலே தமிழ்நூல்கள் வாசித்துத் தேறினவர்களுண்டு. ஸுப்ரஸித்தரான (வைகுண்டவாஸி) வை. மு. சடகோபராமாநுஜாசாரியர் ஸ்வாமிக்குத் தமிழுபாத்யாயரான புன்னை சீமாச்சார் என்று ப்ரஸித்தரான ஸ்வாமியும் ஜீயர் ஸ்வாமியிடத்திலேதான் பரிபூர்ணமாகத் தமிழ் வாசித்தவர் என்று சொல்லக் கேள்வி. பூர்வாச்ரமத்தில் "ஷஷ்டி வரதா சாரியர் ஸ்வாமி"யென்று ப்ரஸித்தர், ஸ்வாமி ஸாமசாகையாதலால் ஸாம வேதத் தைப் பரிபூர்ணமாக வோதினவர்; ச்சாந்தோக்ய உபநிஷத்தை ஸ்வரத்தோடு கர்ணச்ராவ்யமாக ஓதுவர். ஸங்கீத சாஸ்த்ரத்திலும் சிறந்த பாண்டித்யமுள்ளவர். பரமகம்பீரமான திருமேனித் தோற்றம் பரத்வமென்பதைச் சிறிதும் காட்டாத சீலநிதி. உத்தமாச்ரமஸ்வீகாரம் செய்தருளின பிறகு சிலர் ஸ்வாமி ஸன்னிதியிலே வந்து தமிழ்ப்பாடம் ஸாதிக்க வேணுமென்று வேண்டினுர்களாம்; "இனி நான் ஸம்ப்ரதாயக்ரந்தங்கள் தவிர தமிழ்ப்பாடங்கள் சொல்லமாட்டேன்" என்று மறுத்து விட்டாராம். அடியேன் ஜனிப்பதற்கு முந்தியே இம் மாதாமஹஸ்வாமி ஆச்ரமஸ்வீகாரம் செய்தருளியாயிற்று. ஸ்வாமியினுடைய ஜ்யேஷ்டபுத்ரியின் புதல்வனுக அடியேன் ஜனித்திருந்தபடியால் ஸ்வாமிக்கு அடியேனிடத்தில்இளமை தொடங்கியே அபரிமிதமான வாத்ஸல்யம்; 'ஜீயர் தாதா' என்று சொல்லிக் கொண்டு மடத்திலேயே விழுந்து கிடப்பேன். அக்காலத்தில் கம்பராமாயணம் பிள்ளைப்பெருமாளையங்கார் பிரபந்தம் முதலானவை அதிகமாக அச்சேறவில்லை.

அவையெல்லாம் ஸ்வாமிக்கு நாலாயிரதிவ்யப்பிரபந்தம்போல் கண்டபாடமாகவே யிருந்தன. அடியேனுக்கும் அப்படியே யாகவேணுமென்று ஸ்வாமிக்கு உத்கட மான உத்கண்டையிருந்தது. இளமையிலேயே அவற்றை அடியேனுக்குச் சந்தை சொல்லிக் கொடுத்தருளினர். நன்னூலையும் அப்படியே சந்தை சொல்லிக் கற்பித் தருளினுர். பகவத் விஷய ப்ரவசனம் நடக்கிறபோதும் பகல்வேளையில் மடத்திற்கு அடியேனை வரவழைத்துத் தமிழ்ப்பாடங்கள் சொல்லித் தருவர். இடைவிடாது மூன்று வருஷகாலம் இளம்பிராயத்திலே அடியேனைத் தமது திருவடிவாரத்திலே வளர்த்தருளினுர். பதினேழாவது வயதிலிருந்து மறுபடியும் இரண்டு மூன்று வருஷ காலம் அப்படிப்பட்ட பாக்யம் ப்ராப்தமாயிற்று ஜீயர் ஸ்வாமி நான்கு திசைகளிலும் யாத்திரை யெழுந்தருளியிருந்தவராதலால் அக்காலத்தில் ஸ்வாமியை யறியாதபேர் எவ்வூரிலுமிருந்ததில்லை. ஸ்வாமியை ஸேவிக்க தினப்படியாக வெளியூர்களிலிருந்து யாராவது வந்துகொண்டே யிருப்பர்கள். அவர்கள் ஜீயர் ஸ்வாமியினுடைய ஸ்ரீஸூக்தியைக் கேட்க விரும்பினல் ‘அண்ணு! நீ ஏதாவது சொல்லு’ என்று அடியேனுக்கு நியமித்தருள்வர்; அடியேனும் கூசாமல் ஒரு பாசுரத்தையோ ச்லோகத்தையோ எடுத்துக்கொண்டு உபந்யஸிப்பேன். அப்போது ஜீயர்பேரன் என்றே அடியேனுக்கு எங்கும் ப்ரஸித்தி யுண்டாயிற்று. ஜீயர்ஸ்வாமி திருநாடலங்கரித்த பிறகுங்கூட சில வருஷம் வரையில் அந்தப்பெயரே அநுவர்த் தித்து வந்தது. அதுவுமொருகாலம்!

— ஸ்ரீமதுபயவே. இளங்காடு. ரங்காசார்ய ஸ்வாமி. —

12. ஸ்ரீஜகத்குரு. காதிஸ்வாமியின் திருமாளிகை பார்ச்வத்தில் இளங்காடு ரங்காசார்ய ஸ்வாமியென்கிற நியாயவித்வான் எழுந்தருளியிருந்தார். திருப்புட்குழி ஸ்வாமியென்று ப்ரஸித்தரா யெழுந்தருளியிருந்த மஹானுடைய திருக்குமாரரான பட்டண்ணு ஸ்வாமியிடத்தில் நியாய சாஸ்த்ரத்தைப் பரிபூர்த்தியாக வாசித்து ப்ரவசனத்தில் ப்ரவீணரான இந்த ஸ்வாமி பரமஸாத்விகர். க்ருதயுக புருஷர் என்னலாம்படி விளங்கினவர். ஸ்ரீகாதிஸ்வாமிக்குப் பரமஸ்நிக்தர். ஸ்ரீஸ்வாமி தாம் வெளியூர்களுக்கு எழுந்தருளுங்காலங்களில் இந்த இளங்காடு ஸ்வாமியிடத் தில் நியாய பாடங்களை வாசிக்கும்படி நியமித்தருளியிருந்ததனுல் இந்த ஸ்வாமி யிடத்திலும் நியாயக்ரந்தங்கள் இடையிடையில் சில வாசிக்க ப்ராப்தமானதுண்டு. இவரிடத்திலே அடியேன் க்ரஹித்த சாஸ்த்ரார்த்தங்கள் நினைவில் இல்லையாயினும் இவருடைய பரமஸாத்விகத்வம், அஜாதசத்ருத்வம் முதலான கல்யாண குணங் கள் ஏழேழ்பிறவிக்கும் மறக்க முடியாதவையாயிருக்கின்றன.

— ஸ்ரீகாஞ்சீ வித்யோல்லாஸிநீ ஸபையின் வரலாறு —

13. தேவப் பெருமாள் ஸன்னிதியிலிருந்த சடகோப நிலய பாடசாலையில் அவ்விடத்து உபாத்யாயர்கள் சேர்ந்து வித்யோல்லாஸிநீயென்று ஒரு ஸபை ஏற் படுத்தி அதன் மூலமாக அடிக்கடி ஸம்ஸ்க்ருத உபந்யாஸங்கள் நடத்தும் வழக்க மிருந்துவந்தது. 1908, 1909 ஆம் வருஷங்களில் நிகழ்ந்த செய்தியிது. அப் போது காஞ்சியில் ஸம்ஸ்க்ருத பாஷைக்கு பஹுமுகமான ப்ரசாரமிருந்து வந்தது.

வாஹமான கடிதங்களும் பல எழுதிக்கொண்டிருந்தார். அங்ஙனம் பரமஸ்நிக்தரா யிருந்த அவரும் காரண விசேஷத்தினால் சில தூஷணச்சுவடிகளை வெளியிட்டார். அவர்க்கோ வேதத்தில் ப்ரவேசமே கிடையாது, "எதையாவது எழுதி வெளியிட்டு அண்ணங்கராசாரியர்க்கு பங்கத்தை விளைக்கவேண்டியது" என்று ப்ரதிபக்ஷிகளால் மிகவும் வேண்டிக்கொள்ளப்பட்ட அவர் "அண்ணங்கராசார்யஸ்ய அபசப்த நாதி" என்று பெயரிட்டு ஒரு துண்டுக் காகிதம் வெளியிட்டார். அடியேன் வடமொழியில் எழுதி வெளியிட்டிருந்த இதர க்ரந்தங்களில் அபசப்தங்கள் [வியாகரண விருத்த ப்ரயோகங்கள்] இருப்பதாகச் சிலவிடங்களை யெடுத்துக்காட்டி தூஷித்திருந்தார். அது எனக்குக் கிடைத்த ஒரு வாரத்திற்குள் "ரஸிகபுதரஞ்ஜநம்" என்று பெயருள்ள வொரு வடமொழிநூலை அதற்கு மறுப்பாக வெளியிட்டேன். பிறகு சில மாதங்கள் பொறுத்து அவர் மர்மப்ரகாச மென்றொரு புத்தகத்தை அபரிமித நிந்தாபரிஹாஸ பூரிதமாக்கி வெளியிட்டார். அதை ஒரு வருஷம் காஞ்சீ வைசாகோத்ஸவத்தில் கருடஸேவையன்று கோஷ்டிகளில் விநியோகம் செய்தார்கள். உடனே திருத்தேர் மஹோத்ஸவத்திற்குள் உபதேசரஸாயன மென்றும் உபதேச ரசாயநஸார மென்றும் மறுப்புகளை யச்சிட்டு வெளியிட்டேன். அவரவர்கள் மாதக் கணக்கிலும் வருஷக்கணக்கிலும் பலர்கூடிப் பரிச்ரமப்பட்டு ஏழெட்டுபக்கம் அச்சிட்டுக்கொண்டுவந்து "இத்தோடு அண்ணங்கராசாரியர்தலை மடிந்துவிட்டது பாருங்கள்" என்று சொல்லிக்கொண்டே கோஷ்டிகளில் அதை விநியோகம் செய்து கொக்கரித்திருப்பர்கள். மூன்றாவது நாளிலேயே முப்பது பக்கம் ஐம்பது பக்கம் நூறு பக்கம் இப்படியாக மறுப்பு நூல்களை வெளியிட்டு அவர்கள் வாசாமகோசரமான வருத்தத்திற்கு ஆளாகியே ஊர்சென்று சேரும்படி செய்திடுவேன்.

— கீழச்சேரி ஸ்ரீநிவாஸாசாரியர், சின்னமுபாட்ராசாரியர் செய்திகள் —

73. கீழச்சேரி பரவஸ்து ஸ்ரீநிவாஸாசாரியர் என்றொருவர் இருந்தார். அவர் தேவப் பெருமாளுடைய பெரிய உத்ஸவங்கள் தோறும் ஸ்ரீரங்கத்திலிருந்தோ சென்னையிலிருந்தோ காஞ்சிக்கு வருவர். வருகிறபோதெல்லாம் என் விஷயமான தூஷணைகளை நிரப்பித் துண்டுப் பிரசுரமச்சிட்டுக் கட்டு கட்டாகக் கட்டிக் கொண்டுவந்து தன்கையினாலேயே விநியோகிப்பர் பாவம்! இத்தோடு அண்ணங்கராசாரியர் மடிந்து விட்டார்' என்றும் சொல்லிக் கொண்டிருப்பர். மூன்றாவது நாளிலேயே அற்புதமான பதில் புத்தகத்தைப் பெற்றுக்கொண்டு தலைமறையப் போய்விடுவர். திருக்குடந்தையிலிருந்த ஸ்ரீமத் சின்னமு—சைலபாட்டராசாரியரென்பவரும் சில வருஷங்களில் இதே ரீதியாகச் செய்துவந்தார். இங்ஙனே ஒவ்வொரு ஸமயத்திலும் கிளர்ந்த மஹாநுபாவர்களுக்குத் தக்க வாய்மூடி போடுவதற்காக அடியேன் செலவுசெய்த ரூபாய் ஏறக்குறைய இருபதினாயிரமிருக்கும். இத்தகைய ஸந்தர்ப்பங்களில் (வர்த்தமாந) ஸ்ரீமதாண்டவன்—பூர்வாச்ரமத்தில் திருக்குடந்தை கண்ணன்ஸ்வாமி யென்று ப்ரஸித்தரானவரும், (வைகுண்டவாஸியான) ஸ்ரீமத் இளையவில்லி ஸ்ரீநிவாஸாசார்யஸ்வாமியுமாக இருவருமே அடியேனுக்கு அந்தரங்க ப்ரீதியுடன் துணைபுரிந்தவர்கள்.

ஸ்ரீ—7

## — ஸ்ரீமான் D. ராமஸ்வாமி ஐயங்கார் கண்டறிந்த தத்துவம் —

**74.** இங்கு முக்கியமாக ஒரு விஷயம் தெரிவிக்கிறேன். பதினெட்டாவது வயதிலிருந்து இற்றைநாள் வரையில் அடியேனை நோக்கி எதிரம்புகோத்த வித்வான்களும் பண்டிதர்களும் பாமரர்களும் நூற்றுக்கணக்கில்தா னிருப்பர்கள், அடியேனுக்குப் பரமாப்தரும் ஸஹ்ருதயரஸிகருமான ஸ்ரீ D ராமஸ்வாமி ஐயங்காரவர்கள் ஒரு ஸமயம் ஆங்கிலத்தில் எழுதி வெளியிட்டிருந்ததில் ஸாரமான வார்த்தைகளை இங்கு ஆனந்தபூர்வகமாக உதாஹரிக்கிறேன்; அல்லது நினைப்பூட்டுகிறேன்;

"ஸ்ரீமத் அண்ணங்கராசாரியர் ஸ்வாமி க்ரந்தங்களை யெழுதி ப்ரசுரிப்பது நூற்றுக் கணக்கானது. எந்த விஷயத்தை யெடுத்துக்கொண்டாலும் அந்த விஷயத்தில் இவர் காட்டும் நிரூபணங்களில் இவரை வெல்பவர் கிடையாது. இந்த ஸ்வாமி கையாண்ட விஷயங்களோ அனேகம்; இவை பல துறைகளிலுள்ளவை என்பதையும் ஞாபகப்படுத்துகிறேன். வாதப்போர் நடத்துவதில் இந்த ஸ்வாமிக்கு வெகு உத்ஸாஹம். இதனுல் ஸ்வாமியாலும் ஸ்வாமி விஷயமாகவும் அனேக ரஸமற்ற க்ரந்தங்கள் உற்பத்தியாகியிருக்கின்றன. இவற்றுக்கெல்லாம் காரணம் ஸ்வாமியின் அபாரசக்தியேயாகும். இவ்வளவு சக்திவாய்ந்த ஒரு மஹா புருஷர் விஷயத்தில் அசூயையையும் பொருமையையும் எத்திக்கிலிருந்துமெதிர்பார்க்கலாம். ஆனுல் எவ்வித வாதப்போரிலும் ஸ்வாமி பின்வாங்கவேமாட்டார். இவருடைய வாதமே கடைசியாக ஓங்கி நிற்கும் இந்த ரீதியில் அனேகம் உள்ளன. விஷயங்களைத் தேங்காய் உடைப்பது போல வெட்டொன்று துண்டிரண்டென்று உடைத்துக் காட்டுவர்." ......... இப்படியாக D. R. மஹான் ஸ்வாநுபவத்தை ஆத்மவஞ்சனையின்றி உள்ளபடி எழுதி உலகமெங்கும் பரவச்செய்திருக்கிருர். இந்த வார்த்தைகள் எம்பெருமானெழுதுவித்தவையேயன்றி இவர் தாமாக எழுதியவையல்ல என்பது அடியேனது அபிப்ராயம்.

## — காரப்பங்காடு சிங்கப்பெருமாள் திருவாக்கு —

**75.** அற்புதமான வொருவிஷயம். ஸ்ரீவைஷ்ணவ மண்டலியில் தென்னுசார்ய ஸம்ப்ரதாயத்தில் நிகரற்ற மஹா ப்ராஜ்ஞராக விளங்கின மஹான் ஸ்ரீமத் காரப்பங்காடு சிங்கப்பெருமாள்ஸ்வாமி சென்னையில் பலவாண்டுகள் வாழ்ந்த திருக்கண்ணபுரம் பட்டப்பாஸ்வாமியோடு அடியேன் வார்த்தையாடுங்காலங்களில் அவர் இந்த ஸ்வாமியைப்பற்றி அதிமாத்ரம் ப்ரசம்ஸித்துக் கூறுவர். உபயவேதாந்த க்ரந்தங்களிலும், ப்ராசீநக்ரந்தங்கள் நவீந க்ரந்தங்கள் என்கிற வாசியில்லாமல் அனைத்திலும் மஹா ப்ராஜ்ஞரென்று கொண்டாடிக் கூறுவர். இந்த ஸ்வாமியை ஸேவிக்கப்பெற வேணுமென்று அடியேன் நெடுநாள் குதூஹலித்திருந்தேன். இந்த ஸ்வாமி ஸ்ரீரங்கத்தில் நித்யவாஸமாக எழுந்தருளியிருந்து உபயவேதாந்த ப்ரவசநம் செய்தருளாநின்ருரென்று கேள்விப்பட்டு இந்த மஹா ஸ்வாமியை ஸேவிப்பதற்கென்றே ஒரு பரியாயம் ஸ்ரீரங்கத்திற்கு விடைகொண்டேன். அங்கு சிங்கப்பெருமாள் ஸ்வாமி வானமாமலை மடத்தில் வாஸமாக எழுந்தருளியிருந்தார்; ஸ்ரீரங்கநாராயணஜீயர் மடத்தில் காலைமாலை வேளைகளில் உபயவேதாந்த ப்ரவசநம், வெகு ஆச்சரியமாகச் செய்தருளாநின்ருர். சில வேளைகள் தங்கியிருந்து கேட்டுக்

களிக்கப்பெற்றேன். அப்போது அந்த சிங்கப்பெருமாள் ஸ்வாமியின் அளவுகடந்த ஸௌசீல்யகுணத்தை யநுபவிக்க ப்ராப்தமாயிற்று. லோகாபிராமமான வார்த்தை களிலும் சாஸ்த்ரார்த்தங்கள் வெளிவரும்படி வார்த்தையாடியருள்வர். அந்த ஸ்வாமிக்கு ஜ்யோதிச் சாஸ்த்ரத்திலும் அபாரமான பாண்டித்யமுண்டென்பது அப்போது அறியலாயிற்று. ஒருநாள் அந்த ஸ்வாமி அடியேனுடைய ஒரு நோட் புத்தகத்தில் எனது ஜாதகம் குறிக்கப்பட்டிருந்ததைக் கடாக்ஷித்தருளி அதீத-அநாகத பலன்களையெல்லாம் தெரிவித்தருளத் தொடங்கினர். சோதிடத்தில் எத்தனை ச்லோகங்களுண்டோ, எத்தனை பாட்டுக்களுண்டோ அத்தனையும் அந்தஸ்வாமிக்கு வாசோ விதேயங்களாயிருந்தன வென்பதை அந்தக்ஷணத்தில் கண்டறிந்து வியந்தேன், அப்போது அந்தஸ்வாமி அழுத்தம் திருத்தமாக ஒரு விஷயம் ஸாதித்தார்; அதை உலகமெல்லாம் அறிந்தேயிருக்கின்றது. அதாவது,

"பிரதிவாதி பயங்கரரென்கிற குடிப்பெயர் உமக்கு அந்வர்த்தமாகவே யிருக்கும்; உலகத்திலுள்ள வித்வான்கள் யாவரும் தாமாகவே வந்து உம்முடைய வாக்கில் மாட்டிக்கொள்வர்கள். இதை நீர் பரீக்ஷையாகப் பார்க்கலாம்; வேண்டியவர்கள் வேண்டாதவர்கள் என்கிற வாசியில்லாமல் பெரும்பாலும் எல்லாருமே வந்து உம்மிடம் சிக்கிக்கொள்வர்கள். சிக்கிக்கொள்வதோடு நிற்கமாட்டார்கள்; திக்குமுக்கலாடி நிற்பர்கள். சனிக்கிழமையை செவ்வாய்க்கிழமையாக நீர் சொல்லிவிட்டாலும் அது செவ்வாய்க்கிழமையாகவே ஆய்விடும். இத்தால் நீர் விதண்டாவாதம் செய்வீ ரென்றதாகாது; எத்தனை வித்வான்கள் திரண்டு போராடினாலும் உம்முடைய வாதந்தான் ஸித்தாந்தமாக நிற்கும்."

என்று சொல்லி இதற்குப் பல ச்லோகங்களும் பல பாட்டுகளும் ஸாதித்தார்.

"உலகத்தில் சோதிடர்கள் சொல்லுகிறபடியெல்லாம் பலிக்கிறதென்று நிர்ப்பந்தமில்லை; சில வார்த்தைகள் விபரீதமாவதுமுண்டு: இப்போது நான் உமக்குப் பல விஷயங்கள் சொல்லியிருக்கிறேன்; அவற்றில் மற்ற விஷயங்கள் பழுது பட்டாலும் இந்தவொரு விஷயம்மட்டும் பழுதுபடவேமாட்டாதென்று சபதம் செய்வேன்; நூற்றுக்கணக்கான வித்வான்கள் உம்மிடம் வந்து மாட்டிக் கொண்டே தீருவர்கள். நான்கூட ஒருகால் உம்மிடத்தில் மாட்டிக்கொள் வேனோ! என்கிற அச்சமும் உண்டாயிருக்கிறது. ஆனால் எனக்கு விஷயம் தெரிந்துவிட்டபடியால் நான் ஜாகரூகனாகவே யிருந்திடுவேன். இன்னும் நான் பத்திருபது வருஷங்களாவது ஜீவித்திருப்பேனே; அடிக்கடி நாம் சந்திக்க நேருமே. அவ்வப்போதுகளில் நானே இதைப்பற்றின யோகக்ஷேம விசாரம் செய்வேன்" என்றும் ஸாதித்தார். இது 57 வருஷமாகிறது. அந்த ஸ்வாமியின் அந்தத் திருவாக்கு அவ்விடத்திலேயே அன்றைக்கே பலிக்க ஆரம்பித்தது.

## — புத்தங்கோட்டம் ஸ்ரீநிவாஸாசார்யர் ஸ்வாமி —

76. அப்போது அங்கு ஸ்ரீமத் புத்தங்கோட்டம் சீமாச்சார்ஸ்வாமியென்று ஸுப்ரஸித்தரான ஜ்ஞாநாநுஷ்டாந சீலர் எழுந்தருளியிருந்தார். அந்த ஸ்வாமி அஹோபில மடத்து ஆஸ்தாந வித்வானென்றும் விளங்கி வந்தார். அந்த ஸ்வாமியின் பரிசயம் அடியேனுக்கு அதற்கு முன்பு கிடையாது. அடியேன் காவேரிக்காகச் சென்றுகொண்டிருக்கையில் அந்த ஸ்வாமி ஒரு திருமாளிகை வாசல்

திண்ணையில் எழுந்தருளியிருந்து சிலர்க்கு யாதவாப்யுதயபாடம் ஸாதித்து வருகிறார். வீதியூடே சென்றுகொண்டிருந்த வடியேனைப் பரமப்ரேமத்துடன் கடாக்ஷித்து அழைத்துக் குசலப்ரச்நம்பண்ணி உட்காரச்செய்தார். பிறகு பாடம் நடந்து கொண்டிருக்கிறது. அதில் முதல் ஸர்க்க முடிவில் ஒரு ச்லோகரத்நம்;

“ ஆச்வாஸ்ய வாகம்ருதவ்ருஷ்டிபிராதிதேயாந்
தைதேயபாரநமிதாம் தரணீஞ்ச தேவீம்,
ஆவிர்புபூஷுரநகோ வஸுதேவபத்ந்யாம்
பத்மாபதிः ப்ரணிததே ஸமயம் தயாயாः” என்பது.

பூபாரத்தையும் அஸுரோபத்ரவத்தையும் நீக்கும்படி பூமிதேவியாலும் தேவதைகளாலும் பிரார்த்திக்கப்பட்ட க்ஷீராப்திநாதன் அவர்களைத் தேற்றியனுப்பி, தான் தேவகிப் பிராட்டியாரிடம் பிறந்து தனது தயையை வெளிப்படுத்த உத்தேசித்தான்—என்பது இந்த ச்லோகத்தின் தாற்பரியம். இதில் [அநகः] என்னும் விசேஷணம் பகவானுக்குள்ளது. அகில ஹேயப்ரத்யநீகனென்று வேதாந்தங்கள் போற்றநின்ற பெருமானுக்கு இல்லையாகச் சொல்லப்படுகிற அவத்யம் எதுவென்று சங்கை வரக்கூடும். இதன் வியாக்கியானத்தில் அப்பயதீக்ஷிதர் “அநகः—அநவத்யः; தத்தத் கர்மாநுரோதிதயா வைஷம்ய நைர்க்ருண்ய ரஹிதः” என்றெழுதியுள்ளார். அவரவர்கள் செய்யும் புண்யபாபரூப கருமங்களைப் பின்செல்பவனுதலால் வைஷம்ய நைர்க்ருண்யங்களாகிற தோஷங்களில்லாதவன்—என்பது இந்த வியாக்கியான வாக்கியத்தின் பொருள். பகவான் ஜகத்ஸ்ருஷ்டி பண்ணுகிற காலத்திலே இப்படிப்பட்ட தோஷங்களுக்கு சங்கையும் பரிஹாரமும் சாரீரகமீமாம்ஸையில் ஏற்பட்டிருப்பது வாஸ்தவம். பட்டரும் ஸ்ரீரங்கராஜஸ்தவ உத்தரசதகத்தில் * நிம்நோந்நதஞ்ச கருணஞ்ச ஜகத் விசித்ரம் கர்ம வ்யபேக்ஷ்ய ஸ்ருஜதஸ் தவ ரங்கசேஷந், வைஷம்யநிர்க்ருணதயோர் ந கலு ப்ரஸக்திः தத் ப்ரஹ்மஸூத்ரஸசிவாச் ச்ருதயோ க்ருணந்தி * என்கிற ச்லோகத்தினுல் இதனை விசதீகரித்தருளினர். ப்ரக்ருதே ஜகத்ஸ்ருஷ்டியைச் சொல்லுகிற ப்ரகரணமாக இருந்தால் இங்ஙனே பொருள் பணிக்கத்தகும். இது அந்த ப்ரகரணமன்று; பகவான் தன்னுடைய திருவவதார ப்ரகரணமென்பது ஸ்பஷ்டம். இந்த ப்ரகரணத்தில் (அநகः) என்பதற்கு வைஷம்ய நைர்க்ருண்ய தோஷமில்லாதவன் என்று பொருள் கூறுவது ஏலாது இவ் விஷயத்தை அந்த புத்தங்கோட்டம்ஸ்வாமி விமர்சியாமல் வியாக்கியானத்திலுள்ள படியே பாடம் சொல்லிக்கொண்டிருந்தார் இதைக் கேட்டுக்கொண்டிருந்த அடியேன் “இங்கே ஒரு விவக்ஷையுண்டு, விஜ்ஞாபிக்கலாமோ?” என்றேன்; அவ்விடத்து வியாக்கியான பங்க்தி பொருந்தாதென்பதை விஜ்ஞாபித்தேன். பரிகராலங்காரம் அமைய அருளிச்செய்யப்பட்ட (அநகः) என்னும் விசேஷணத்திற்கு வைஷயம்யநைர்க்ருண்ய தோஷமில்லாதவனென்கிற பொருள் அப்ரஸக்தமென்று உபபாதித்தேன். அப்பய தீக்ஷிதர் எவ்வளவு வியாபகர்; அவருடைய வியாக்கியானத்திற்கா குற்றங்குறை கூறுகின்றீர்; (அநகः) என்பதற்கு வேறு எவ்விதமாக அர்த்தம் சொல்லமுடியும்; நீர் சொல்லும் பார்ப்போம்” என்றார். “அஸ்மதாதிகளுடைய பிறப்புக்குக் கர்மம் காரணம்; கர்மவச்யத்வமாகிற தோஷம் நமக்குண்டு; எம்பெருமான் க்ருபாவச்யனுகிப் பிறக்கிறுனேயொழியக் கர்மவச்யனுகிப் பிறப்பதில்லை. ஆகவே கர்மவச்யத்வமாகிற தோஷமில்லாதவன்

என்பதே இங்குப் பொருத்தமான பொருள்; இந்த ரீதியில் மற்றும் சில பொருள்களும் சொல்லலாம்: தீக்ஷிதர் எழுதியுள்ள பொருள் இவ்விடத்திற்குப் பொருந்தாதுதான்'' என்று அரைமணிகாலம் விவரித்து விண்ணப்பம் செய்தேன். அதன்மேல் அந்த ஸ்வாமி சீற்றத்தோடு சில வார்த்தைகள் ஸாதிக்க "சேஷம் கோபேந பூரயேத் என்பது தெரிந்ததுதானே'' என்றேன். அதைக்கேட்ட வுடனே அவர்க்கு இன்னமும் அளவுகடந்த சீற்றமுண்டாகிவிட்டது. அந்தோ! வைரஸ்யமதிகரித்துவிட்டதே யென்று உடனே அடியேன் அகன்றுவிட்டேன். அப்போது ஸாயம்ஸந்த்யாஸமயம் ஒரு நாழிகை கழித்து அடியேன் ஸன்னிதிக் குள் விடைகொண்டேன்; அப்போது வஸந்தோத்ஸவமென்று ஞாபகம். அங்கே அடியேன் ஒரு பக்கமாக இருந்துகொண்டிருக்கையில், அந்த புத்தங்கோட்டம் ஸ்வாமியும் அங்குப் பெருமாள் ஸேவைக்காக வந்து அப்போது அங்கு உபஸ்திதர் களாயிருந்த சில வித்வான்களுக்கு அடியேனைச் சுட்டிக்காட்டி "இந்த பிள்ளை யாண்டான் யாரோ தெரியவில்லை; என்னிடம் வலுவில் வந்து *சேஷம் கோபேந பூரயேத்* என்கிறார்; எனக்கு ஆறவேயில்லை; என்று பெருமிடறு செய்து பலபல ஸாதிக்கிறார். அவர்களெல்லாரும் விஷயமென்ன? என்று கேட்க; அதற்கு அவர் "விஷயம் ஏதுவாவதிருக்கட்டும்; இவருடைய வயது என்ன? இவர் வந்து என்னை (சேஷம் கோபேந பூரயேத்) என்பதா? இது என்ன த்ருஷ்டத்தனம்!'' என்று கத்துகிறார், ஆறுத சீற்றம் பொங்க அலமருகின்றார்.

### — ஸ்ரீமத் பரமஹம்ஸ பௌண்டரீகபுரம் ஸ்வாமி —

77. அப்போது அங்கு எழுந்தருளியிருந்த மஹாப்ராஜ்ஞரான ஸ்ரீமத் பரம ஹம்ஸ பௌண்டரீகபுரம் ஸ்வாமி "தேவரீருக்குக் கோபமுண்டானபடியாலன்றோ அவர் சேஷம் கோபேந பூரயேத் என்று சொல்லியிருக்கவேண்டும்; தேவரீருக்கு கோபமுண்டானது வாஸ்தவந்தானே; எதனாலுண்டாயிற்று? நடந்தவிஷயத்தை நாங்கள் தெரிந்துகொள்ளும்படி ஸாதிக்கலாகாதோ?'' என்றார். பிறகு, நடந்த விஷய சர்ச்சைகளை அந்த ஸ்வாமியே விரித்துரைக்க நேர்ந்தது. அடியேன் விஜ் ஞாபித்தவற்றையும் அந்த புத்தங்கோட்டம் ஸ்வாமியே அநுவதிக்க ப்ராப்தமா யிற்று. எல்லாவற்றையும் கேட்ட பௌண்டரீகபுரம் ஸ்வாமி "அந்த பிள்ளை யாண்டான் சொன்னதில் அவத்யம் ஒன்றுமில்லையே; அதன்மேல் இவ்வளவு மநஸ்தாபம் வளருவதற்கு ஹேதுவில்லையே. அப்படியும் சொல்லலாமென்று தேவரீர் ஒரேவார்த்தையில் முடித்திருக்கலாமே'' என்று ஸாதித்தார். அப்போது பக்கத்திலிருந்த மற்றொரு வித்வான் "அப்படியும் சொல்லலாமென்று சொன்னால் அந்த பிள்ளையாண்டான் விட்டுவிடுவாரோ? அப்படித்தான் சொல்லவேணும்; வேறுவிதமாகச் சொல்லக்கூடாதென்பதன்றோ அவருடைய அபிப்ராயம் என் றார். இப்படியாக வார்த்தைகளின்மேல் வார்த்தை மிகமிக வளர்ந்து சென்றது. தீக்ஷிதர் எழுதியிருப்பது ரஸ்யமன்று என்றே பலரும் முடிவு செய்தார்கள். இவ் விஷயம், அப்போது நடந்துகொண்டிருந்த ஸுப்ரஸித்தமான வேதாந்த தீபிகா பத்ரிகையில் வெளிவந்து முள்ளது. புத்தங்கோட்டம் ஸ்வாமியோடு அன்று தொடக்கமான வாதம் அவ்வளவோடு நின்றுவிடாமல் மற்றும்பல விஷயங்களிலும் பெருகியிருக்கின்றது பரஸ்பரம் பல க்ரந்த ரசனைகளும் ஏற்பட்டுவிட்டது.

"ரக்ஷாவிலோசநபாவப்ரகாசிகை" "நமஸ்கார தத்வ விஜயத்வஜம்" முதலான அடியேனது க்ரந்தங்கள் உலகமறிந்தவை. ஸ்ரீரங்கத்தில் அன்று நடந்த நிகழ்ச்சியை அன்றிரவே சிங்கப்பெருமாள் ஸ்வாமி கேட்டருளி அடியேனைத் தேடிக் கொண்டு எழுந்தருளிவிட்டார். "நான் சொன்னது எப்படி?" என்று கேட்டருளினார் * வாசம் அர்த்தோநுதாவதி * என்று விஜ்ஞாபித்தேன்.

78 இந்த ஸந்தர்ப்பத்திற்குப் பிறகு சிங்கப்பெருமாள் ஸ்வாமியைப் பல பரியாயம் ஸேவிக்க நேர்ந்ததுண்டு. அந்த ஸ்வாமி அடியேனைக் கண்டவுடனே குசலப்ரச்னங்கள் செய்தருள்வதற்கு முன்னம் இதைப்பற்றியே கேட்டருள்வது வழக்கம்; "இப்போது எந்தபண்டிதர் மாட்டிக்கொண்டு திண்டாடுகிறார்?" என்று புன்முறுவலோடு கேட்டருள்வர். "எதுவும் ஸ்வாமிக்குத் தெரியாமலிருக்க ப்ரஸக்தியில்லையே' என்று பதில் விண்ணப்பம் செய்வேன். எந்த வாதவிவாதமும் உடனுக்குடனே பத்ரிகைகளில் அச்சேறிப் பிரசுரமாகிக் கொண்டிருந்தபடியாலும், ஒவ்வொன்றும் சிங்கப்பெருமாள் ஸ்வாமி ஸன்னிதிக்கு அனுப்பப்பட்டே வந்தபடியாலும் அங்ஙனம் விண்ணப்பஞ்செய்வே னடியேன். "கிடைப்பதையெல்லாம் விடாமல் பார்த்துக்கொண்டுதா னிருக்கிறேன். அவரவர்கள் தாமாக வந்து மாட்டிக்கொள்வதும் உண்மையில் லோகோபகாரத்திற்குத் தானாகிறது" என்று ஸாதித்தருள்வர். இவ்விஷயத்தில் அந்த மஹாஸ்வாமியின் திருவாக்கு பலித்து வருவதுபோல் வேறு எந்த சோதிடர் வாக்கும் பலிக்கக் கண்டதில்லை.

— ஸகல ஸ்ரீவைஷ்ணவர்களும் குறிக்கொள்க —

79. அடியேன் எழுதி அச்சிட்ட நூல்கள் டன்னிரண்டுதுறைகளில் அமைந்துள்ளன வென்பதை உலகமறியும். அவற்றுள் பரபக்ஷப்ரதிக்ஷேபத்துறையென்பதுமொன்று. அஸம்பத்தமென்று தோன்றும் விஷயங்களைக் கண்டித்தெழுதுவது அடியேனுக்கு இளமையிலிருந்தே வழக்கமாய்விட்டது. இதனால் சிலர்க்கோ பலர்க்கோ மனோவிகாரமுண்டாக ப்ரஸக்தியுண்டு. இதைப்பற்றி விவேகிகள் தெளிய விண்ணப்பஞ் செய்கிறேனிங்கு. ஸ்ரீதேசிகனுடைய வைபவத்தை உள்ளபடி உரைக்கத் தோன்றிய க்ரந்தம் ஆசார்யசம்பூ என்பது. வேதாந்தாசார்யவிஜயமென்பது இதுவே. இதில் தெரிவிக்கப்படாத பலகதைகளைப்புனைந்து, தென்னாசார்ய தூஷண ப்ரசுரமான தேசிகவைபவநூல்கள் அடியேனுடைய இளமையில் வெளிவரத் தொடங்கின. அவற்றை விமர்சிக்கவேண்டிய ஆவச்யகதை யுண்டாயிற்று.

உலகில் மதபேதங்கள் இல்லாமலிருக்க முடியாது. உலகுக்கெல்லாம் பாஷை ஒன்றேயாகவுள்ளதோ? இல்லையே; ஒரு க்ராமத்துக்குள்ளேயே ஒன்பது பாஷைகள் நடையாடக் காணாநின்றோமன்றோ? அப்படியே பலபல மதங்கள் தோன்றியிருப்பதும் ஸஹஜமே. ப்ராஹ்மண ஸமுதாயத்தில் ஊர்த்வபுண்ட்ரதாரிகளை யெடுத்துக்கொள்வோம். புண்ட்ர உபாதான த்ரவ்யத்தில் எத்தனை பேதங்கள்? புண்ட்ராகார ஸந்நிவேசத்தில் எத்தனை பேதங்கள்? இவை இன்று நேற்று ஏற்பட்டவையா? சந்திரஸூரியாதிகளோடு கூடவே இவையும் தோன்றியவை யென்பதை யாரேனும் மறுக்கமுடியுமா? இதை அடியேன் நன்கு உணர்ந்தவன். ஆகவே எந்த மதத்திலும் எந்தபுண்ட்ரத்திலும் அடியேன் வெறுப்போ

பகையோ கொண்டவனல்லேன். கொள்பவர்கள் அவிவேகிகளேயாவர். நமது பூருவாசாரியர்கள் ஆதரித்திருந்த புண்ட்ராகாரம் எது? விசிஷ்ய வேதாந்த தேசிகன் அணிந்துகொண்டிருந்த புண்ட்ராகாரம் எது? என்பதைமட்டும் அடியேன் விமர்சிப்பவனுதலால் அந்த விமர்சங்களை ப்ரஸங்காத் வெளியிடுவது கொண்டு அடியேனை மத்ஸர க்ரஸ்தனுகச் சிலர் எண்ணுவது தகுதியற்றது.

ஸம்ப்ரதாயார்த்தங்களில் தேசிகனுக்கு அபிமதமல்லாதவற்றை அவர்க்கு அபிமதமாக ஏறிட்டு, தேசிக ஸம்ப்ரதாயமென்றும், தேசிகதர்சனமென் றும் புதுப் பெயர்களைப் புனைந்து சிலர் ப்ரசாரம் செய்துவருவதும் மிகத் தவறு என்னும் கொள்கையை அடியேன் சிக்கெனக் கொண்டவன். இதுக றும் அடியே னெழுதி வெளியிட்டுள்ள பன்னூறு நூல்களில் நூற்றுக்கு மேற்பட்டவை இந்த விசாரத்திலேயே பரந்திருக்கின்றன. இருநூறு வருடங்களுக்கு உட்பட்ட காலத்தி லேயே தேசிக ஸம்பந்தத்தை வலிந்து நலிந்து ஏறிட்டுக்கொண்டவர்கள் ஏற்கெ னவே தாங்கள் கொண்டிருந்த கொள்கைகளை தேசிகனுடையவையாக ப்ரசாரம் செய்துவருகிறுர்களென்பதை அடியேன் சோம்பாமல் பலநூல்களால் நிருபித்து வருகிறேனென்பதையும், பிறர் இதை மறுக்க நெஞ்சாலும் நினைக்ககில்லாமல் வாளா இருந்து வருகிறுர்களென்பதையும் உலகமுழுது முணர்ந்திருக்கின்றது. அடியேன் எதையும் ஆதாரமின்றி ஆக்ரஹத்தா லெழுதுபவனல்லேன். 'வாய் திறக்க வுண்டோ வழி'' என்று பல பெரியார்கள் துணிந்து எழுதியுள்ளபடியேதான் ஒவ்வொன்றையு மெழுதியிருக்கிறேன், எழுதிவருகிறேன்.

சிலர் இலேசாக மறுப்புக் கூறிவிடுவதுண்டு; (அதாவது) "இவர் (P.B.A.) ஏற்கெனவே சிலபலவாண்டுகளுக்கு முன்பு தாம் இசைந்திருந்தவற்றையும் ஏதோ பிடிவாதங்கொண்டு தாமே மறுக்கிறுர்; தன்னைத் தானே கண்டித்துக் கொள்ளு கிறுர்' என்று. இதைப்பற்றி நான் பலகால் விரிவான விடைகள் விடுத்திருந்தாலும் இப்போது இங்குச் சுருக்கமாகத் தெரிவிக்கிறேன்.

## — சில விமர்சங்கள் தோன்ற உண்மைக்காரணம் நிருபித்தல் —

80. "நமக்கு உபதேசரத்தினமாலை யிருப்பதுபோல் அவர்களுக்குப் பிரபந்தசாரம்; நமக்கு ஸ்ரீசைலேசதயாபாத்ர மிருப்பதுபோல் அவர்களுக்கு ராமாநுஜதயாபாத்ரம்; ............'' என்றிங்ஙனேதான் நெடுநாள் நினைத்திருந் தேன். இப்போதும் இங்ஙனே பலர் நினைத்திருப்பதுண்டே, ஹரிதிந திலகம் தேசிகன் ஸாதித்தது—என்று எத்தனை வித்வான்கள் எத்தனை வருஷகாலமாக எண்ணியிருந்தனர் தெரியுமோ? யார்க்கும் எதிலும் ப்ரமம் நீங்குவதற்கு ஒரு கால விசேஷமோ ஹேது விசேஷமோ உண்டாகிற தன்றே. நின்று கேண்மின். திடீ ரென்று ஒருஸமயம் ஸ்ரீராமாநுஜதயாபாத்ரத் தனியன்தோன்றி அறுநூறுவருடமாயிற் றென்று ராமாநுஜதயாபாத்ரோத்ஸவமென்று இங்கே கொண்டாடத் தொடங்கினுர் கள். அப்போதுதான் விமர்சமுதிக்க அவகாசமேற்பட்டது. ஸ்வாமிக்கு ஸ்ரீமாந்வேங் கடநாதார்ய: என்கிற தனியன் பரமகம்பீரமாயும் எஞ்ஞான்று மெங்கும் சிறப்புப்பெற்ற தாயும் விளங்காநிற்க அதை உபேக்ஷித்து, அவதார ஸ்தலத்திலுங்கூட விலை செல்லகில்லாதவொரு ச்லோகத்திற்கு உத்ஸவம் என்றுல் இதைப்பற்றி விவேகி

களுக்கு விமர்சம் விளையாமலிருக்க முடியுமா? தனியனுக்கு உத்ஸவம் என்பதே விசித்திரம்; அதிலும் தோன்றின நாள் முதல் பங்கப்பட்டே வருகின்றவொரு தனியனுக்கு உத்ஸவமென்றால் ஈச்வரன் கொடுத்த விவேகசக்தியை யுடையவன் விவேகியாமலிருக்கமுடியுமா?

*ஸ்ரீமான்வேங்கடதனியனுக்கு உத்ஸவமென்றால் ஒருவாறு இசைந்திருக்கும். அதை தேசிகனுடைய அவதார ஸ்தலத்திலேயே அவருடைய திருமுன்பே நடத்தவுங்கூடும். அதைவிட்டு, அஸக்ருத் ப்ராப்தபங்கமான தனியனுக்கு உத்ஸவமென்பதும், அதுதானும் புதிதாகக் கட்டினவொரு க்ருஹத்திலென்பதும் எவ்வளவோ விமர்சத்தை யுண்டாக்காதா? உண்டான விமர்சத்தை சதசஃ ஸஹஸ்ரசஃ வெளியிடநேர்ந்தது. "கீழ்நாட்களில் ஒப்புக்கொண்டிருந்து இப்போதாக மறுக்கிறாரிவர்' என்று சொல்லிவிட்டால் இது ஸமாதானமாகுமோ?

## — ஸ்ரீகோஷ்டிபுரம் ஸ்வாமியின் விலையுயர்ந்த வார்த்தை —

81. அக்காலத்தில் ஸ்ரீமத் திருக்கோட்டியூர் ஸௌம்ய நாராயணாசார்ய ஸ்வாமி காஞ்சியில் ஸ்திரவாஸமாக எழுந்தருளியிருக்கிறார். ஸ்ரீமத் பரம... இஞ்சிமேட்டு ஸ்வாமிபோலவே இவரும் விஷயங்களை கோபதாபமில்லாமல் கேட்பதும் சொல்லுவதுமாயிருந்தபடியால் என்னுடைய விமர்சங்களையெல்லாம் அவரிடம் ஸமர்ப்பித்தேன். முழுதும் கடாக்ஷித்துவிட்டு ஸாதித்தது இவ்வளவே; ஏதோவொரு பத்ததி நடந்து வந்ததென்பதும் இடையில் மாறுபாடு நேர்ந்ததென்பதும் வாஸ்தவம். இதுவும் ஏறக்குறைய நூறுவருஷங்களுக்கு மேற்பட்ட காலமாக நடந்து வருகிறதென்பதை தேவரீரும் இசைந்திருக்கிறது. எங்களுக்கு ப்ரவேசமுள்ள கோவில்களிலும் மடங்களிலும் ஒருவிதமான வழக்கம் வந்துவிட்டது; தேவரீருடைய விமர்சத்தைக்கண்டு இதையெல்லாம் மாற்றிக் கொள்வதென்பது ஸாத்யமா? உங்களுடைய பத்ததியை இனி நாங்கள் பரிக்ரஹிக்க முடியுமா? ஒருவிதமாக வந்துகொண்டிருக்கிற ஆசாரத்தை நாங்கள்தான் விடமுடியுமா? ஏதோ பகவத் ஸங்கல்பத்தினால் நடந்து வருகிற லீலைகள் இவை—என்றிருக்க வேண்டியது. நியாயாலயவியவஹாரங்களுக்கு இடமளித்தது அநீதியே—இத்யாதி. இது ப்ராமாணிகமும் ஸாத்விகமுமான வார்த்தையென்று உகந்தேன்.

## — நிகமன விஜ்ஞாபனம் —

அடியேன் விஜ்ஞாபிக்கவுத்தேசித்த எண்பது விஷயங்கள் முடிவுபெற்றுவிட்டன. ஆனால் விஜ்ஞாபிக்க வேண்டியவை இன்னமும் பலபல சேஷித்திருக்கின்றன. இளமைதொடங்கி அடியேன்செய்த வடநாட்டுத் தென்னாட்டு யாத்திரை விசேஷங்கள், திவ்யப்பிரபந்த திவ்யார்த்த தீபிகையுரை யெழுதிய விசேஷங்கள், சென்னை யுபந்யாஸ ஸபைகளில் அந்வயிக்கப்பெற்ற வரலாறுகள், அந்த ஸபைகளின் மூலமாகப் பலபல பெரியார்களின் பரிசயத்திற்கும் ப்ரணயத்திற்கும் பாத்திரமாகப்பெற்ற பரிசுகள், ஸ்ரீகாஞ்சியில் நம்பிள்ளை ஸன்னிதி திருப்ரதிஷ்டையமைந்த வகைகள், க்ரந்தமாலா ப்ரகாசன ப்ரணாளிகள், நான்கு பாஷைகளிலும் மாதாந்தப் பத்திரிகைகளின் வெளியீடுகள், நான்கு பாஷைகளிலும் திவ்யப்ரபந்த ஸ்தோத்ர வியாக்கியான வெளியீடுகள், ஸமீபகாலத்தில் மணவாளமாமுனிகளின் அறுநூறாண்டு நிறைவு நினைவு மலர்களாக ஐந்து பாஷைகளிலும் அரிய பெரிய க்ரந்த ப்ரகாசனங்கள்....முதலிய பல விஷயங்களைப்பற்றி ஏற்கெனவே விரிவாக வெளியிட்டுள்ளவற்றை நினைப்பூட்டி நிற்கிறேன். தற்காலம் வாழ்கின்ற மஹான்கள் எண்பது திருநாமங்களைப் பற்றி விரைவில் எழுதி க்ருதக்ருத்யனாவேன். ... *

**ஏண்பது விஷய விஜ்ஞாபனம் முற்றிற்று.**

ஸ்ரீ:

பெருமாள்கோவிலில் திருமாளிகையில் நடைபெற்ற

# ஸ்ரீஸ்வாமியின் சதாபிஷேக மஹோத்ஸவ நிகழ்ச்சி

(திருமலை அனந்தான்பிள்ளை, க்ருஷ்ணமாசாரியன், சிரோமணி வித்வான் திருப்பதி.)

---

ஸ்ரீமதித்யாதி விசேஷண விசேஷலக்ஷ்யபூதரா யெழுந்தருளியிருக்கும் ஜகதாசார்யஸிம்ஹாஸநாதிபதி மஹாவித்வான் பெருமாள்கோவில் ப்ரதிவாதிபயங் கரம் அண்ணங்கராசார்ய ஸ்வாமியின் திருநக்ஷத்ர (சதாபிஷேக) மஹோத்ஸ வத்தை இவ்வருஷம் பூர்த்தியாக உடனிருந்து அநுபவிக்கும் பாக்கியம் படைத்த அடியேன் அவ்வுத்ஸவ நிகழ்ச்சியைப்பற்றிச் சிறிது விண்ணப்பிக்க விழைகின்றேன். 31—3—71ல் தொடக்கமாகி 13—4—71 ஸ்ரீ ஸ்வாமி திருநக்ஷத்திரமாகிய திரு விசாகத்தில் மேற்கண்ட உத்ஸவம் இனிதே முடிவுபெற்றது. இந்நாட்களில் உபயவேத கோஷ்டிகளின் அழகு நெஞ்சால் நினைப்பரிது. ஆயினும் சிறிதெழுது கிறேன்.

## திவ்யப்ரபந்த ஸேவை

முதல் ஐந்து நாட்களில் காலை வேளைகளில் முதலாயிரமும், இரவு வேளை களில் இயற்பாவும் ஸேவித்து முடித்து, பிறகு பத்து நாட்களில் பெரியதிருமொழி யாயிரமும் திருவாய்மொழியாயிரமும் இராமாநுச நூற்றந்தாதி உபதேசரத்தின மாலைகளும் ஸேவித்து முடிக்கப்பட்டது. காலையில் 7-30 மணி முதல் 10-30 மணி வரையிலும், இரவு 8 மணி தொடங்கி 10-30 மணியளவிலுமாக இப்படி பதினைந்து நாட்களில் திவ்யப்ரந்தமும் ஸ்தோத்ர பாடங்களும் ஸேவித்த அத்யாபக ஸ்வாமிகளும் கேட்டநுபவித்த மஹான்களும் உண்மையில் அம்ருதஸாகராந்தர் நிமக்ந ஸர்வாவயவர்களாய்ப் பேரானந்த மெய்தியதை ப்ரத்யக்ஷீகரித்த அடியேன் உள்ளபடி அதைப் பேசப் பாசுரம் அகப்படாமல் தடுமாறுகின்றேன். 'பல்லாண்டும் பரமாத்மனைச் சூழ்ந்திருந்தேத்துவர் பல்லாண்டே' என்று பெரியாழ்வார் இங்கே திருப்பல்லாண்டு பாடுவார்க்கு, நித்யவிபூதியில் சென்று ஸ்ரீவைகுண்டநாத னுக்குப் பல்லாண்டு பாடுவதைப் பயனாக அருளிச்செய்கிறார். அப்படி அங்கு நடக்கும் திருப்பல்லாண்டு ஸேவையும் இந் நாலாயிர ஸேவையோடு சிறிதும் ஒவ் வாதென்பதே அடியேனுடையவும் மற்றும் பலருடையவும் த்ருடாத்யவஸாயம். பெருமாள் கோவில் மணவாளமாமுனிகளின் ஐப்பசித் திருமூல வுத்ஸவத்தில் தவிர இந்த ஜம்புத்வீபத்தில் வேறெங்கும் இதைப்போல் திவ்யப்ரபந்தம் ஸேவிப்பதில்லை யென்று அநுபவரஸிகர்களின் ஸித்தாந்தம். "கைங்கர்யந்தான் பக்திமூலமாக அல்லாதபோது பீதி மூலமாக வரவேணும்" என்ற ஸ்ரீவசனபூஷண ஸ்ரீஸூக்தியின் படி ஸ்ரீஸ்வாமியினிடத்தில் பக்தர்களாய்ப் பலரும் பீதர்களாய்ச் சிலருமாக ஏறக் குறைய நூறு ஸ்வாமிகள் சேர்ந்து திவ்யப்ரபந்த ஸேவையைப் பரம மதுரமாகப் பெருமிடறு செய்து நடத்தியருளியதைப் பற்றி எவ்வளவு புகழ்ந்தாலும் போதாது.

## வேத பாராயணம்

பதினைந்து நாட்களிலும், பின்மாலை மாலைகளில் திருவீதிப்ரதக்ஷிணரூபமாக மூன்றுமணி காலமும், பகல் (2 மணி முதல் 5 மணி வரை) மூன்றுமணி காலமுமாக ஏறக்குறைய 25 வேதபாடிகளால் பூர்ணமாக வேதபாராயணம்செய்து பூர்த்திசெய் யப்பட்டது. ஸ்ரீஸ்வாமிக்கு திவ்யப்ரபந்தத்தில் உள்ள ஊற்றத்தைவிட வேதத்தில் ஊற்றம் அதிகமென்று பலர் கூறுவதுண்டு; ஆகவே வேதபாராயண வைபவத்தைப் பற்றி அதிகமாக எழுதத் தேவையில்லையென்று நிற்கிறேன்.

## உபந்யாஸங்கள்

ஒவ்வொருநாளும் இரவு திவ்யப்ரபந்த ஸேவை முடிவுபெற்ற பின்பு ஸ்ரீஸ்வாமி முக்கால்மணி காலத்திற்குக் குறையாமல் தமது 'வ்யாக்யான வாசஸ்பதி' என்ற அநிதரஸாதாரணமான பிருதத்திற்குச் சேர, பழுத்த ஞானத்தின் பரீவாஹ மாக, பரிபக்வமான திருமேனியுடன் ஸேவை ஸாதித்துக்கொண்டு கம்பீர மதுர கண்டத்வநியில், திருவாய்மொழியில் ஓதப்படுகின்ற அர்த்தபஞ்சகத்தை ஆசார்ய ஹ்ருதய திவ்யசாஸ்த்ர சூர்ணையொன்றுகொண்டு அருளிச்செய்த உபந்யாஸத்தைக் கேட்கப் பெற்றவர்கள் விண்ணுளாரிலும் சீரியரே யென்னத் தட்டில்லை. திருவிசா கத்தன்று இரவு நம்மாழ்வார் ஸந்நிதியில் ''பெருங்கேழலார் தம்பெருங்கண்மலர்ப் புண்டரீகம்'' என்று தொடங்கும் திருவிருத்தப் பாசுரத்தைக் கொண்டு பரக்க ஸ்ரீஸ்வாமி ஸாதித்த உபந்யாஸம் ''கடல் மண்ணெல்லாம் விலையோ' என்னும்படி விளங்கி எல்லோருடைய திருவுள்ளமும் தேனூறித் தித்திக்கும்படி யிருந்ததை அடியேன் எங்ஙனே எழுதமுடியும்?

ஸாரார்த்தச் சொல்லழகரான ஸ்ரீ உ.வே. (கோயில்) சதாபிஷேகம் கோவிந்த நரஸிம்ஹாசாரியர் ஸ்வாமி திருவாய்மொழியும் ஜீவாத்மஸ்வரூபமும் என்பதுபற்றி தமது விருதுக்கேற்ப மிகவும் ரஸமாக உபந்யஸித்தார். ஸ்ரீ உ. வே. தி. அ. ஸ்ரீ சைலம் க்ருஷ்ணமாசார்யஸ்வாமி 'ஜக்த்வா கர்ணேஷு தூர்வாங்குரம்' என்று தொடங்கும் ஸுதர்சந சதகச்லோகத்தையும், ஸ்ரீமான் ஆழ்வார்திருநகரி இளைய வில்லி பூவராஹாசார்யஸ்வாமி *ஆழிமழைக்கண்ணா என்ற திருப்பாவைப் பாசுரத் தையும் நம் ஸ்வாமிபரமாகப் பொருந்த நிர்வஹித்து நிரர்க்களமாகச் சொற்பொழி வாற்றினர். மதுரை காலேஜ் ப்ரொபஸர் சதுர்ப்பாஷா விசாரத. நரஸிம்ஹாசார்ய ஸ்வாமி ஸ்ரீஸ்வாமியின் ஸகல லோகோபகாரக நாநா க்ரந்தநிர்மாணத்தைப் பற்றிப் பாராட்டிக் கவிதை மூலமாகப் பேசினர். மதுராந்தகம் காலேஜ் வ்யாகரண ப்ரொபஸர் ஸ்ரீ உ, வே. உத்தரமேரூர் வாஸுதேவாசார்யஸ்வாமி, திருவெவ்வுளூர் அர்ச்சகர் நரஸிம்ஹாசாரியர்ஸ்வாமி, ஸ்ரீ உ.வே. ப்ரஹ்மதேசம் ராமாநுஜாசார்ய ஸ்வாமி ஆகியோர் ஸம்ஸ்க்ருத ச்லோகங்களினாலும் நெஞ்சுகனிந்த வாய்மொழிக ளாலும் ஸ்ரீஸ்வாமியைப் புகழ்ந்து பேசினர். திருப்பாப்புலியூர் அட்வொகேட் ஸ்ரீ உ. வே. ராமாநுஜாசார்யஸ்வாமி ஸ்ரீஸ்வாமியின் வைபவத்தைப் பேரானந்தம் பொங்கிப் பேசி அனைவரையும் மகிழ்வித்தனர். ஸ்ரீஸ்வாமியின் அபிமானத்திற்கு விசேஷபாத்ரபூதரான எழும்பூர் அட்வொகேட் ஸ்ரீமாந் R.V. சேஷாத்ரீ அய்யங்கார்

(மஹாவாக்மி) 'ரதிர் மதிஸரஸ்வதீத்ருதி ஸம்ருத்திஸித்தி ச்ரிய:' என்று தொடங்கும் ஸ்ரீகுண ரத்நகோச ச்லோகத்தின்படி ஸ்ரீஸ்வாமியைப் பெரிய பிராட்டியாரின் கடாக்ஷமும் அது அடியாக ரத்யாதி ஸம்ருத்தியும் பெற்றவராகப் புகழ்ந்து பேசி, ஸ்ரீஸ்வாமியின் ப்ரதிபாவிசேஷத்தை சென்னை யுபந்யாஸ கோஷ்டிகளில் தாம் பலகாலமாக அநு பவித்த வகைகளைக்கூறி விசேஷித்துக் கொண்டாடினர். (இது 10—4—71 காலை கோஷ்டியில்.) மதுராந்தகம் காலேஜ் வ்யாகரண ப்ரபொஸர் ஸரளகவி. பாதூர். ராகவாசார்யஸ்வாமி எழுதியனுப்பிய ச்லோகங்கள் கோஷ்டியில் வாசிக்கப்பட்டன. 11—4—71 காலையில் திருப்பதி ஸ்ரீவேங்கடேச்வர யூனிவர்ஸிடி ப்ரொபஸர் திருவாளர் டாக்டர் ந. சுப்பு ரெட்டியார் அவர்கள் தாம் திவ்யப்ரபந்தத்தில் டாக்டர் பட்டம் பெற ஸ்ரீஸ்வாமியின் திவ்யார்த்த தீபிகையுரை மிகவும் பயன்பட்டதென்று விளக்கிக் கூறி, அண்மையில் தாம் எழுதிய 225 பக்கங்கள் கொண்ட மலைநாட்டுத் திருப்பதி என்ற நூலை ஸ்ரீஸ்வாமிக்குப் பாதகாணிக்கையாக ஸமர்ப்பித்து, ஸ்ரீஸ்வாமி யைப் பூர்வாசார்யர்கள் ஒன்று சேர்ந்து அவதரித்த அவதாரமென்று மனமாரக் கொண்டாடினர். அதற்குமுன்னுள் திருப்பத்தூர் தமிழ்வித்துவான் திருவாளர் கா.அ. ஷண்முக முதலியார் அவர்கள் தொண்ணூறு எண்சீர் விருத்தப்பாக்களால் தாம் தொடுத்த "சூடிக்கொடுத்த சுடர்க்கொடி" என்ற நூலினை கோஷ்டியில் ஸ்ரீஸ்வாமி ஸந்நிதியில் ஸமர்ப்பித்து அரங்கேற்றினர். கோஷ்டி ஸ்வாமிகளையும் ஸம்பாவித் தனர். 84 பிராயம் புக்க அவரது ஞானச்சிறப்பையும் கவிதைத் திறமையையும் அனைவரும் கொண்டாடினர்.



**க்ரந்த ஸமர்ப்பணம்**

ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சன பத்ரிகையின் ஆசிரியரான ஸ்ரீ உ.வே. புத்தூர் ஸ்வாமி 13—4—71 காலையில் அட்வொகேட் S. க்ருஷ்ணஸ்வாமி ஐயங்கார்

(திருவிசாகத்தன்று) ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சன வெளியீடான ஸ்ரீஸ்வாமியின் சதாபிஷேகமலர் ஒன்றை ஸ்வாமிஸந்நிதியில் ஸமர்ப்பித்து அனைவருக்கும் விநியோகித்துத் தம்முடைய ம்ருது மதுரபாஷணத்தால் ஸ்ரீஸ்வாமியை மிகமிகப் பராட்டியருளினர்.

## ஜீயர்ஸ்வாமிகள்

மணவாளமாமுனிகளின் திருவடிபணிந்த அஷ்டதிக்கஜாசாரியர்களுள் உத்தமாச்ரமகள் மூவர் எழுந்தருளியிருந்ததாக ப்ரஸித்தம். அம்மூவருமே இங்கெழுந்தருளி ஸேவைஸாதிக்கின்றார்களென்று பலரும் உகந்து பேசும்படியாக உபய வேத கோஷ்டிகளையும் அணிசெய்திருந்தவழகு அற்புதம்! அற்புதம்!! என்று பேசாதாரில்லை. ஸ்ரீமத்பரமஹம்ஸ திருமலை திருப்பதி பெரிய கோவில்கேள்வி ஸ்ரீரங்கராமாநுஜ பெரியஜீயர் ஸ்வாமிகள் கடைசியில் 4 நாள்கள் கோஷ்டியை அலங்கரித்திருந்தது சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது. ஜ்ஞாநாநுஷ்டானங்களினாலும் ஒழிவில் காலமெல்லா முடனாய் மன்னித் தெழிகுரலருவித் திருவேங்கடத்தெந்தைக்குச் செய்யும் வழுவிலா வடிமையினாலும் அஷ்டதிக்கஜாந்தர்ப் பாவத்தாலும் திருமலை ஜீயர்ஸ்வாமி மிகமிகப் பெருமை பெற்றவரன்றோ? நம் ஸ்வாமிமீது மிகப் பரிவுகொண்ட ஸ்ரீமத்பரமஹம்ஸ காஞ்சி அழகியமணவாள யதீந்த்ரப்ரவண ராமாநுஜஜீயர்ஸ்வாமியும், ஸகல ஜகத்ப்ரஸித்தராய்ப் பலபல க்ரதுக்கள் செய்வித்து 108 க்ருதுஸ்தம்பங்களை நாநா தேசங்களில் ப்ரதிஷ்டாபநம் செய்தருளின ஸ்ரீமந் நாராயண ராமாநுஜ ஜீயர் ஸ்வாமிகளும் எழுந்தருளியிருந்து ஸ்ரீஸ்வாமியின் சதாபிஷேகோத்ஸவத்தை இனிதே நிர்வஹித்தருளியது இம்மஹோத்ஸவத்திற்கு சிகரமாக விளங்கியிருந்தது. ஸ்ரீமத்பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீபெரும்பூதூர் எம்பார் ஜீயர்ஸ்வாமி இடையில் ஐந்து நாள் எழுந்தருளியிருந்து கோஷ்டியை யலங்கரித்தருளினர்.

## ஸம்பாவனை

இங்ஙனம் எழுந்தருளியிருந்து க்ருபைசெய்த எல்லா ஸ்வாமிகளுக்கும் சதாபிஷேகம் கண்டருளும் ஸ்ரீஸ்வாமி, எம்பெருமான் தமக்கு ஸங்கல்பித்த சக்திக்கும் மேற்பட சால்வைகளும் ஸம்பாவனைகளும் உலகத்தோர் வியக்கவும் உகக்கவும் தக்க ரீதியில் ஸமர்ப்பித்தார்.

## க்ருதஜ்ஞதாவிஷ்கரணம்

இப்படி மிக மிக வழங்கியும், கடைசியில் ஸ்ரீஸ்வாமி "இத்தனை ஜீயர்ஸ்வாமிகளும் எத்தனையோ திவ்யதேசங்களிலிருந்து எழுந்தருளின அத்யாபக வேதபாடி ஸ்வாமிகளும் தம்முடைய அல்பப்ரார்த்தனையை மிகையாகக்கொண்டு அவரவர்கள் தம் பேருக வெழுந்தருளியிருந்து கோஷ்டியைச் சிறப்புற நடத்திக் கொடுத்ததற்கு அடியேன் என்ன கைம்மாறு செய்யப்போகிறேன்? ஏதோ ஸ்வல்பம் ஸத்கரித்தேனாகிலும் ஸ்வாமிகளின் பெருமைக்கு அது சிறிதும் ஈடாகாது; தலையல்லால் கைம்மாறிலேன்" என்று கூறி கண்ணும் கண்ணீருமாய் வெள்கிநின்ற நிலையைச் சேவித்த அடியேனுக்கு, "ப்ரஸீதந்து பவந்தோ மே ஹ்ரீரேஷா ஹி மமாதுலா, யதித்ருசைர

ஹம் விப்ரை ரூபஸ்தேயை ருபஸ்தித:'' என்று ஸ்ரீராமபிரானது நிலைமையைப் பேசின வால்மீகி வசனமும், ''அஸ்மை ந கிஞ்சிதுசிதம் க்ருதமித்யதாம்ப! த்வம் லஜ்ஜஸே கதய கோயமுதாரபாவ: '' என்று ஸ்ரீரங்கநாச்சியாரைப்பற்றி பட்டரருளிய ச்லோக மும் நினைவுக்கு இலக்காகிப் பரமானந்த முண்டாயிற்று.

அப்போது மதராஸ் வைஷ்ணவ காலேஜ் ஸம்ஸ்க்ருத லெக்சரர் ஸ்ரீமான் A. திருவேங்கடத்தான் ஸ்வாமி ஸ்ரீஸ்வாமியை ஒரு ச்லோகத்தினால் மிக வழகாகப் போற்றினார். அடியேனும் ஸ்ரீஸ்வாமி பிறர்க்கு நிலமல்லாமல் வாரிவழங்கியிருக்கும் பல நூற்றுக்கணக்கான அர்த்த விசேஷங்களில் இரண்டொன்றை விண்ணப்பித்து ஸ்ரீஸ்வாமியின் பெருமைக்கடலில் சில திவலைகளை அநுபவித்து ஸ்வரூபம் நிறம் பெற்றேன்.

திருநக்ஷத்ரத்தன்று ஸாயங்காலம் ஜீயர்ஸ்வாமிகள் மூவருடனும், நூற்றுக் கணக்கான உபயவேதபாராயண ஸ்வாமிகளுடனும் அலையாருங்கடல்போல் முழங்கித் திருவீதிகளில் நடந்த ஸ்தோத்ரபாட கோஷ்டி முடிவடையுந் தருவாயில் (சென்னை) கவிதாரத்னமென்று பெயர் பெற்றுப் பலநூல்களை யெழுதிப் புகழ்பெற்ற ஸதீமணி ஸ்ரீமதி. ஹா. கி. வாலம் அம்மையார் என்கிற லலனாரத்னம் தனது கணவரான ப்ரஹ்மஸ்ரீ க்ருஷ்ணய்யரவர்களோடு கூட அதே சமயத்தில் விரைந்து வந்து சேர்ந்து திவ்யப்ரபந்தச் சந்தைகளினாலேயே வாழ்த்துக்கள் கூறி ஸ்ரீஸ்வாமி திருமாளிகையிலேயே தான் படியாய்க்கிடந்து வாழவிரும்பியிருப்பதாகச் சொற் பொழிவாற்றி ஜீயர்ஸ்வாமிகளுட்பட ஸகல ஸ்வாமிகளையும் எழுதுசித்திரங்கள் போல நிற்கவைத்து மகிழ்வித்தமாண்பு என்றும் மறக்கமுடியாததாயிருந்தது.

ஸ்ரீஸ்வாமியினிடத்தில் பரம பக்திபூண்டவர்களான (சென்னைவாஸிகளான) ஸ்ரீஉவே. A. ஸ்ரீநிவாஸய்யங்கார், ஸ்ரீ C. சுப்பராயலு செட்டியார், கராலபாடி. ராதாகிருஷ்ணய்யா, ஊரா. ஜகன்னாத செட்டியார் A. V. கன்னைய நாயுடு, V. N. தேவநாதன், (Free India Editor) D. கிருஷ்ணமூர்த்தி ஸ்வாமி முதலான பல மஹான்கள் தாம்கொண்ட ஆனந்தமும் காட்டிய அபிமானமும் எற்றைக்குமேழேழ் பிறவிக்கும் மறக்கமுடியாத தென்று ஸ்ரீஸ்வாமியின் ஆனந்த பரீவாஹோக்திகளோடு இம்மஹோத்ஸவ ஸமாப்தியாயிற்று.

முடிவில் ஒரு மகிழ்ச்சிப் பேச்சு. ஸ்ரீஸ்வாமியின் எல்லாப் பெருமைகளுக்கும் மேலான பெருமையாக வாய்த்தது ஜாமாதாக்களிருவருடையவும் திருக்குமாரரொரு வருடையவும் ஸஹயோக ஸௌமநஸ்யங்கள் பரமஸத்வஸமாச்ரயர்களான ஸ்ரீமதுபயவே. அக்காரக்கனி. ஸம்மத்குமாராசார்யஸ்வாமி, மணவாள திருமலாசாரிய ஸ்வாமியாகிய ஜாமாதாக்களிருவரோடுங்கூடி திருக்குமாரரான ஆயுஷ்மாந் ஸ்ரீரங்கநாதன் எதிலும் குறையொன்றும் கூறமுடியாதபடி இம்மஹோத்ஸவத்தை நிர்வஹித்த அதிசயமொன்றே ஒவ்வொருவருடையவும் நெஞ்சைவிட்டகலாதது இப்படி எத்தனையோ பங்குனி விசாகங்களைக் காணக் கடவோமென்றே ஒவ்வொரு வரும் சொல்லிக்கொண்டிருந்தது. பொலிக! பொலிக!! பொலிக!!!

# "இன்னும்பன் னூற்றாண் டிரும்"

ந. ரா. முருகவேள், M.A., M.O.L.,
ஆசிரியர்: திருக்கோயில், சென்னை-34.

ஜகதாசார்ய சிம்மாசனாதிபதி மகாவித்வான் 'பத்மவிபூஷண்'
பிரதிவாதி பயங்கரம்

## ஸ்ரீமத் உ.வே. அண்ணங்கராசார்ய ஸ்வாமிகள் அவர்களின்

எண்பதாம் ஆண்டு நிறைவுவிழாப்

## பாராட்டியல் வாழ்த்துப் பாக்கள்

---

1. பேரறிஞர் என்போர்க்கும் பேரறிஞர்! கல்விநலன்
நேராரும் இன்றி நிரம்பிநின்றோர்!—சீராரும்
'நாமங்கை தானும் நலம்புகழ வல்லளோ?'
சேமங்கொள் அண்ணங்கர் சீர்!

2. அண்ணங்க ராசார்ய! ஐய! நும் கல்விநலம்
எண்ணுந் தொறும்மிகவே இன்பமுற்று,—முன்னம்
'பெரும்பூதூர்த் தோன்றும் பெருமுனிவர்' என்றே
இறும்பூதிங் கெய்திநிற்பேன் யான்!

3. அண்ணங்க ராசார்யர் போற்கற்றோர் யாருமிலர்!
எண்ணுங்கால் மற்றவன்றன் இன்னருளை—மண்ணின்மிசை
என்போலப் பெற்றோர் எவருமிலர்! ஏகலவ்யன்
அன்றோ அவர்திருத்தாட்கி யான்?

4. கலைபயின்ற நற்றெளிவு, கட்டுரைக்கும் வன்மை,
நிலைதிறம்பா வாதநெறி நீர்மை,—புலவிருந்தாம்
செவ்வியநற் பன்னலம்சேர் செம்மல்அண்ணங் கர்சிறப்பை
எவ்வகை,யான் பாராட்டு வேன்?

5. வடமொழியில், தென்மொழியில், வண்தெலுங்கு இந்தி
திடமொழிகள் தம்மில்,ஒரு சேர—மிடலுடனே
நல்லிதழ்கள் தாம்நடத்தும் அண்ணங்க ராசார்ய
வல்லறிஞர் போல்வார்யார் மற்று?

6. தேசும் திறலும் திருவும் புலமையும்
மாசிலா வைணவநன் மாண்புகளும்—பேசில்,உயர்
அண்ணங்க ராசார்யர் ஆற்ற மிகஅமைந்தார்!
விண்ணும்தான் போற்ற வியந்து.

7. "அரிய தெளிதாகும், ஆற்றலால் மாற்றிப்
பெருக முயல்வாரைப் பெற்றால்"—சரியிதென
முன்னம்பூ தத்தார் மொழிந்தவுண்மை, யான்தெளிந்தேன்
அண்ணங்க ராசார்ய ரால்!

8. தானே தனக்குவமன்! தன்புலமை யேபுலமை!
தேனே அவன்றன் திருநூல்கள்!—வானே
வியந்துதொழும் அண்ணங்க ராசார்யர் மேன்மை
நயந்துமிகப் போற்றியுய்வோம் நாம்!

9. அன்புமிகு சான்றேய்! அறிவாற்றல் மிக்குயர்ந்தோய்!
இன்பமிக எண்பதாண் டெய்திநின்றேய்!—துன்றும்நின்
நற்புலமை மாண்பெல்லாம் நான்புகழ வல்லேனே?
பொற்புமிக வாழ்க!நலம் பூத்து.

10. கீர்த்திமிகு கே.எஸ். கிருஷ்ணன்போற் பேரறிஞர்
ஆர்த்திமிகப் போற்றி அகமகிழ்ந்தார்!—தீர்த்தகராம்
நம்அண்ணங் கர்சீர் நயந்தென்றால், என்சொல்வேன்
செம்மல் அவர்தம் சிறப்பு?

11. மாற்றலர்தம் கோள்கள் மறுத்தொழித்துத் தம்கருத்தை
ஆற்றல்மிக நாட்டும் அருந்திறலில்—ஏற்றமிக்கார்
காஞ்சிவாழ் அண்ணங்க ரார்யர்! அவர்பெருமை
யாஞ்சொல்லப் போமோ இனிது?

12. அன்றுபலர் சான்றேர்கள் ஆற்றல்மிக வைணவத்தை
நன்றுமிகப் போற்றி நனிவளர்த்தார்!—இன்றதனைத்
தாம்ஒருவர் போற்றிமிகத் தாங்கி வளர்க்கின்றார்.
ஆம்!அவர்தொண் டென்புகழ்கேன் யான்?

## விருத்தம்

1. மாஇருங் கலைகள் கற்றேன்! மகாவித்வான்! மறைகள் தேர்ந்தோன்!
காயிரும் பொழில்கள் சூழ்ந்த கச்சியம் பதியில் வாழ்வோன்;
தாவரும் சீர்நம்பிள்ளை சந்நிதி அமைத்த சான்றேன்;
ஆயிரம் பிறைகள் கண்ட அண்ணங்க ரார்யர் வாழ்க!

2. வாக்கு வன்மை மணவாள மாமு னிகள்போல் வாய்த்துடையோர்!
ஆக்கும் உரையால் அப்பெரிய வாச்சான் பிள்ளை போன்றெளிர்வார்!
தேக்கு சமய வளர்ப்புழைப்பில் சீர்இ ராமா நுசர்நிகர்ப்பார்!
யார்க்கும் அண்ணங் கராசார்யர் அருமை பெருமை அளிப்பரிதால்!

3. மாத இதழ்கள் பலபதிப்பார்! மாண்பார் பலநூல் வெளியிடுவார்!
வேதப் பள்ளி, கோஷ்டிகள்தாம் விளங்க நிறுவி நடத்துகிற்பார்!
ஓதி உய்நூல் பலதொகுப்பார்! உயர்ந்த அறங்கள் பலபுரிவார்!
நீதி வழுவா அண்ணங்கர் நிகரில் பெருமைக் கெல்லையுண்டோ?

4. நூற்றுக் கணக்கில் சிறந்தநல்ல நூல்கள் பலதாம் வெளியிட்டோர்!
மாற்றுப் பொய்ம்மைக் கொள்கைகளை மறுக்கும் திறனில் நிகரில்லார்!
வேற்றுப் புலத்தார் தாமும்மிக வியக்கும் சிறந்த வித்தகத்தார்!
ஆற்றல் மிக்கார் அண்ணங்கர்! அவர்தாம் வாழ்க பல்லாண்டே!

5. புலவ ராகப் பலர்இருப்பர்! புரவ லராகச் சிலர்இருப்பர்!
புலவர் தாமே புரவலராய்ப் புவியில் இருத்தல் மிகஅருமை!
அலகில் சீர்த்தி அண்ணங்கர் ஆசார் யர்தாம், புலவர்களுள்
தலைவர்! மற்றும் புரவலராம் சான்றோர்! வாழி நெடிதூழி!

6. இன்சொற் செல்வ! வைணவநல் இயல்பனைத்தும் எய்திநிற்போய்!
நன்சொற் புலவ! நாவலவ! நல்ல பலநூல் ஆசிரிய!
தென்சொற் கடந்து வடசொற்கடற் கெல்லை தேர்ந்த சிறப்புடையோய்!
என்சொற் கொண்டு நுமைப்புகழ்கேன் இனிது வாழ்க பல்லாண்டே!

7. நாற்ப தின்மேல் ஆண்டுகளாய்ச் சென்னை நகரில் திருப்பாவை
போற்றி, உரையிற் சொற்பொழிவிற் புதிய புதிய பொருள்நலங்கள்
தோற்றி, விளக்கம் செய்துவரும் தூயோய்! இராமா நுசநன்
[முனிவரைப்போல்
ஏற்று, நுமையும் திருப்பாவை ஜீயர் என்றே யாம்தொழுவோம்!

8. சீலம் மிகுப்ரதி வாதி பயங்கரப் பேர்சிறந்தீர்!
சாலநன் றெண்பதாம் ஆண்டு நிறைவு தகஅடைந்தீர்!
ஞாலம் வியக்கும் நலஞ்சார் பணிகள் நனிபுரிந்தீர்!
மேலும்பல் லாண்டுகள் வாழ்க!நீர் இன்பம் மிகநிறைந்தே!

9. நாலா யிரத்தீவ் வியப்பனுவல், நலஞ்சேர் உரைகள், பண்டிருந்த
நல்லா சிரியர் பனுவல்களின் நயஞ்சார் உரைகள், துதிநூல்கள்,
மேலாம் ஆழ்வார் ஆசார்யர் மேன்மை யுணர்த்தும் வியன்நூல்கள்,
மிக்க ரகசி யார்த்தங்கள் விளக்கும் நூல்கள், வேதாந்த
நூலாம் அரியபல நூல்கள், நுட்பம் மிகுகண் டனநூல்கள்,
நுனித்த மரபு வழிநூல்கள், நுவலும் பலவாம் மொழிநூல்கள்,
கோலா கலமாய் வைணவநற் கொள்கை பரப்ப வெளியிடும்சீர்க்
குணக்குன் றண்ணங் கராசார்யர், குலவும் தொண்டிற் கிணையுண்டோ?

10. எண்பதாண் டான இளைஞரே! வைணவநற்
பண்புகள்தாம் ஒன்றிநிற்கும் பாங்குடையோய்!—தொண்டுகள்தாம்
மன்னும் படிசெய்யும் மாண்பார்அண் ணங்கர்ஐய!
இன்னும்பன் னூற்றாண் டிரும்!

13—4—71ல் சதாபிஷேகங்கண்டருளின ஜகதாசார்யர்



ஸ்ரீ:

# டில்லிமாநகரில்
# ஸ்ரீ உ.வே. ப்ர. அண்ணங்கராசார்ய ஸ்வாமிகளின் சதாபிஷேகக் கொண்டாட்டம்

## ஸ்ரீ ஸ்வாமிக்கு அபூர்வ வரவேற்பும் மரியாதைகளும்

## தலைநகர்வாசிகளின் ச்ரத்தாஞ்ஜலி

[ஸ்ரீராமமந்திர் ஸெகரெடரி ஸ்ரீமான் A. ராமாநுஜாசாரி, B.A., புதுடெல்லி]

ஸ்ரீ உ வே. ஜகதாசார்ய ஸிம்ஹாஸநாதிபதி மஹாவித்வான் ப்ரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசார்ய ஸ்வாமி உத்தரதேச க்ஷேத்திர யாத்திரையாகப் புறப்பட்டு, துவாரகை ஹ்ருஷீகேசம் ஹரித்வாரம் முதலிய புண்யஸ்தலங்களை மங்களாசாஸனம் செய்துவிட்டுப் பின்பு ஆஸ்திக பக்தர்களின் வேண்டுகோளுக்கிணங்கிப் புதுடில்லிக்கு 20—3—71ல் எழுந்தருளினர். இம்மாதம் ஸ்ரீஸ்வாமிக்கு 80 திருநக்ஷத்திரம் பூர்ணமாகி சதாபிஷேக மஹோத்ஸவம் வருவதையொட்டி அவருக்குத் தலைநகர் வாசிகள் வரவேற்பளித்து மரியாதை செய்யத் திட்டமிட்டிருந்தனர். ஸ்ரீஸ்வாமியின் விஜயம் நோடீஸ் மூலமாகவும் பத்திரிகை வாயிலாகவும் ஒருவாரத்திற்கு முன்பே யாவருக்கும் பரவிவிட்டது.

21—3—71 ஞாயிற்றுக்கிழமை மாலை 4 மணிக்கு ஸ்ரீராமமந்திரம் என்ற சக்ரவர்த்தித் திருமகன் ஸந்நிதியில் விசேஷமாக இடப்பட்ட பந்தலின் கீழ் ஸ்ரீஸ்வாமியின் திருநக்ஷத்ரோத்ஸவம் நன்கு நடைபெற்றது. ஒருமணி காலத்திற்கு முன்னமேயே ஆஸ்திகர்கள் குழாங்கூடியிருந்தனர். 4 மணிக்கு வேத கோஷம் ஒலிக்கப் பூர்ண கும்பத்துடனும் கோவில் மரியாதைகளுடனும் நியாயாதிபதி உயர்திரு ஆர். எல். நரஸிம்மன் அவர்கள் தலைமையில் ஸ்ரீஸ்வாமிக்கு ஸ்வாகதம் அளிக்கப்பட்டது. குழுமியிருந்த நகரவாஸிகளில் ஸ்ரீ ஜஸ்டிஸ் ஏ. அழகிரிஸாமி, ஸ்ரீ ஜஸ்டிஸ் T. V. R தாதாசாரியர், ஸ்ரீ ஜஸ்டிஸ் S ரங்கராஜன், ஸ்ரீ C S. ராமசந்திரன் I C S இவர்களைச் சிறப்பாகக் குறிப்பிடலாம். பந்தலில் ஆயிரக்கணக்கில் மக்கள் திரண்டிருந்ததையும், சிறியதிருவடி ஸந்நிதி மண்டபத்தில் ஸ்ரீசக்ரவர்த்தித் திருமகன்



பிராட்டியோடும் இளையபெருமாள் சிறிய திருவடிகளுடனும் ஸர்வாபரண



பூஷிதராய் நம் ஸ்வாமியின் மங்களாசாஸனத்திற்
காகக் காத்துக்கொண்டிருந்த காட்சியையும் பார்த்
தவர் பாக்யசாலிகளாவர். ஸ்ரீஸ்வாமி, பெருமாள்
எம்பெருமானுர் மணவாள மாமுனிகள் இவர்களை
மங்களாசாஸனம் செய்துவிட்டுப் பின்பு உபந்யாஸ
மேடையில் அமர்ந்தருளினர்.

ஏறக்குறைய இருபது கனபாடிகளின் வேத
கோஷத்துடன் சதாபிஷேக மஹோத்ஸவ நிகழ்ச்சி
ஆரம்பமாயிற்று. ஸ்ரீராமமந்திரத்தின் உபதலைவர்
ஸ்ரீ ஜஸ்டிஸ் ஆர். எல். நரஸிம்மன் அவர்கள்
ஸ்ரீ ஸ்வாமிக்கு வடமொழியில் வரவேற்புரை நிகழ்த்
தினர். அதன் ஸாரம்—"நமது ஸ்ரீராமன் ஸந்நிதிக்கு
ஸ்ரீஉ வே. ப்ர. அண்ணங்கராசார்யஸ்வாமி எழுந்தருளியதனால் இது ஆழ்வார்களின்
பாடல்பெற்ற ஸ்தலங்களைவிட மிகவும் புனித தலமாகிவிட்டது. அவர் ஸ்ரீவைஷ்
ணவ வுலகில் மிகமிக விளங்கும் சூரியனுவர். தமிழ்மொழி வேதம் வடமொழி
வேதம் இவையிரண்டிலும் இவரை விஞ்சியவர் வேறெருவரும் இல்லை என்பது
அடியேன் துணிபு. நான்கு பாஷைகளில் இவர் வெளியிட்டுவரும் மாதப் பத்திரி
கைகள் நிகரற்றவை. இவற்றின் வாயிலாக ஸம்ஸ்க்ருதத்திற்கும் தமிழிற்கும் இவர்
செய்துவரும் தொண்டு மிகவும் கொண்டாடத் தக்கது. முதன்முதலாக
ஸ்ரீவேதாந்த தேசிகருடைய எல்லா நூல்களையும் "தேசிக க்ரந்தமாலா" என்னும்
பெயருடன் பதிப்பித்த பெருமை ஸ்ரீஸ்வாமியைச் சேர்ந்ததேயாம். திவ்யப்ரபந்தங்க
ளுக்கும் ஆசார்யர்கள் அருளிய ஸகலஸ்தோத்ரங்களுக்கும் ஸ்ரீஸ்வாமி இட்டருளிய
உரைகள் ஒப்புயர்வற்றன. ஸம்ப்ரதாயத்திற்கு ஸ்ரீஸ்வாமிசெய்த—செய்துவருகின்ற
கைங்கர்யங்கள் கணக்கில் அடங்காதவை. இவை எல்லாவற்றையும் பார்த்தால்
இவர் நம் தேசிகனுடைய அவதாரமோ என்னலாம்படி இருக்கிறது. ஸம்ப்ரதாயத்
திற்கு ஸ்ரீஸ்வாமி ஒரு மதிப்பிடமுடியாத மாணிக்கம். இவருடைய மங்களாசாஸன
பலத்தினுல், தலைநகரில் முதன்முதலாக ஸ்ரீமத் பரமஹம்ஸ ஸ்ரீமந்நாராயண
ராமாநுஜ ஜீயரால் பிரதிஷ்டை செய்யப்பட்ட ஸ்ரீராமன் ஸந்நிதி சீக்கிரத்தில் ஒரு
பெரிய கோவிலாகப் பரிமளிக்கு மென்பது அடியேனது திடநம்பிக்கை. நாஸ்திக
மதம் தாழவும், குத்ருஷ்டிகள் பங்கமடையவும், வைதிகமதம் தழைத்தோங்கவும்
நம் ஸ்வாமிக்கு த்ருடகாத்திரத்துடன் பூர்ணுயுஸ்ஸைக் கொடுத்தருளும்படி ஸ்ரீமந்
நாராயணனை நாம் ப்ரார்த்திப்போமாக" என்பது.

அதன்பிறகு "ஸ்ரீ P. B A. ஸ்வாமி சதாபிஷேக வரவேற்புக் கமிட்டியின்
சார்பாக ஸ்ரீ ஜஸ்டிஸ் ஏ. அழகிரிஸாமி அவர்கள் ஸ்ரீ P. B A. ஸ்வாமிக்கு விலை
யுயர்ந்த ஒரு பொன்னுடையும் ஒரு சால்வையும் போர்த்திப் பணமுடிப்பை ஸமர்ப்
பிப்பதற்குப் பூர்வாங்கமாக அவருடைய அரிய பெரிய பெருமைகளைப் பின்வருமாறு

புகழ்ந்தார். "பெரியோர்களே பெண்மணிகளே! இன்று எனக்கு ஒரு பெரும்பேறு கிடைத்திருக்கிறது. சென்ற இரண்டாண்டுகளாக ஸ்ரீஸ்வாமியின் திருநக்ஷத்திர



விழாவில் கலந்துகொள்ளும் பாக்கியம் அடியேனுக்குக் கிடைத்து வந்தது. இவ்வாண்டு சதாபிஷேகத்தோடு கூடிய அவருடைய திருநக்ஷத்திரத்தில் கலந்து கொள்ள முடியாமற் போயிற்றே என்று கவலைகொண்டிருந்தேன். ஆனால் அக் கவலையை ஸ்ரீஸ்வாமியே இங்கு எழுந்தருளி நீக்கிவிட்டார். ஸ்ரீ ஜஸ்டிஸ் நரஸிம்மன் அவர்கள் ஸம்ஸ்க்ருதத்தில் ஸ்வாகதம் நிகழ்த்தினார். நான் ஸ்ரீஸ்வாமியைப்பற்றி எதைச் சொல்ல விரும்பியிருந்தேனோ அதை அவரே சொல்லிவிட்டாரென்று எனக்குள்ள அரைகுறையான ஸம்ஸ்க்ருதஜ்ஞானத்தாலறிந்துகொண்டேன். ஸ்ரீஸ்வாமியின் கல்வி கரையற்றதாகையால் கல்விக்கடல் என்றே அவரை அழைப்பது மிகையாகாது. இவ்வளவு சிறிய இவரது சிரஸில் இவ்வளவு ஜ்ஞானம் எங்ஙனம் அடங்கியிருக்கிறதென்று சில சமயங்களில் ஆச்சரியப் படும்படியாயிருக்கும். அவருக்கு வைதிகவுலகத்தில் தெரியாதது எதுவுமில்லை. அவர் பேச ஆரம்பித்தால் கடல் மடைதிறந்தாற்போல் இருக்கும். வேதமோ திவ்யப்ரபந்தமோ வால்மீகிராமாயணமோ கம்பராமாயணமோ காளிதாஸாதிகவிகளின் காவியங்களோ வியாகரணமோ தருக்கமோ எதிலும் அவருடைய அறிவு குறையற்றிருக்கும்.

இன்று அவரைக் கௌரவிப்பதற்காக அடியேனை நியமித்திருக்கிறார்கள். பொன்னாடை சாத்தி அவரைக் கௌரவிக்கவேண்டும். ஆனால் நாம் அவரைக் கௌரவித்து, நம்மை நாமே கௌரவித்துக் கொள்ளுகிறோம் என்பதே உண்மை. ஸ்ரீஸ்வாமியைக் கௌரவிப்பதனால், 'கற்றாரைக் கற்றாரே காமுறுவர்' என்று கூறிப் பிறரெல்லாம் கல்வி கற்காத நம்மையும் கற்றாரென்று நினைக்கும்படியாயிருக்கும். ஸ்ரீஸ்வாமிக்குப் பொன்னாடைபோர்த்து ஒரு பொற்கிழியையும் அவருக்குச் சமர்ப்பிக்கிறோம். அவருக்குப் பணம் தேவையில்லை. அவர் தமக்குக் கிடைக்கின்ற எல்லாப் பணத்தையும் ஸ்ரீவைஷ்ணவஸித்தாந்த ஸம்பந்தமான க்ரந்தங்களைப் பதிப்பிப்பதற்கே உபயோகிக்கிறார். சிறிதும் தமக்காகச் செலவிடுவதில்லை.

அவர் பிரசுரித்திருக்கும் நூல்கள் கணக்கில் அடங்காதவை யென்று உங்களுக்குத் தெரிந்திருக்கும். சிலர் ஸ்வாமியை ஒரு Controversial person—விவாதத்தில் ஈடுபட்ட புருஷர் என்று சொல்லுவர்களாம். நான் அவரை அறிந்துகொண்டவரையில், அது முற்றிலும் தவறு. சிறிது பிரயாசப்பட்டு அறிய முயல்வார்களானால், இந்த அபிப்ராயம் ஆதாரமில்லாததென்பதை அவர்கள் அறிவார்கள். வரம்பறுத்த எம்பெருமானுர் தரிசனத்தை இப்போது சிலர் இருபிரிவுடையதாகக் கருதினாலும் ஸ்ரீஸ்வாமியினுடைய அபிப்பிராயத்தின்படி இரண்டு பிரிவுகள் இல்லை. தரிசனம் ஒன்றே. அதுதான் தென்னாசார்ய ஸம்பிரதாயம். தென்கலை வடகலை என்று அநாவச்யமாக வேறுபாடுகளை நாம் வகுத்துக் கொள்ளுகிறோம். ஸம்ஸ்க்ருதமும் த்ராவிடமும் இரு கண்கள். அவற்றில் ஒன்றை மற்றொன்றிற்குக் குறைந்ததாக நினைக்க இடமில்லை. தேசிகராலும் மணவாள மாமுனிகளாலும் நம் குருபரம்பரையில் வந்தவர் எல்லாரையும் நாம் நன்கு மதிக்கவேண்டும் என்பதே நம் ஸ்ரீ P. B A. ஸ்வாமியின் அபிப்ராயம். நாம் எல்லோரும் ஸ்வாமியின் சொற்பொழிவைக் கேட்க ஆவலுடன் இருக்கிறோம். அதற்கும் உங்களுக்கும் இடையே இடைஞ்சலாக நிற்க நான் விரும்பவில்லை. நான் இங்கு (டில்லிக்கு) வந்தபோது ஒரு நியதி வகுத்துக்கொண்டேன். அதாவது யாதொரு நிகழ்ச்சியிலும் பங்கெடுத்துக் கொள்வதில்லை என்பதே. ஆனால் எதற்கும் ஒரு விலக்கு உண்டல்லவா? நான் ஸ்ரீஸ்வாமியின் சதாபிஷேக வரவேற்பு உத்ஸவத்தில் கலந்துகொண்டது அவ் விலக்கின்பாற்படும். 'நான் ஸ்ரீஸ்வாமிக்குச் சம்பந்தமான நிகழ்ச்சியில் கலந்து கொள்ள முடியாதென்று சொல்லுவது எப்போதும் இல்லை. நானும் ஸ்ரீ ஸ்வாமியின் பேச்சைக் கேட்க ஆவல்கொண்டுள்ளமையினால் என் புகழுரையை இத்துடன் நிறுத்திக்கொள்ளுகிறேன். எங்கிருந்தாலும் முடிந்தவரை ஸ்ரீஸ்வாமியின் பேச்சைக் கேட்க நான் தவறுவதில்லை. இங்குக் குழுமியிருக்கும் உங்களெல்லோருடையவும் சார்பாக ஸ்ரீஸ்வாமிக்குப் பொன்னாடை போர்த்தியும் பொற்கிழியை ஸமர்ப்பித்தும் அவருடைய 80வது திருநக்ஷத்ர பூர்த்தி உத்ஸவத்தில் அவரைக் கௌரவித்து அதன்மூலமாக நம்மை நாம் கௌரவித்துக் கொள்ளுவோமாக.''



இங்ஙனம் ஸ்ரீ ஜட்ஜ் அழகிரிஸாமி அவர்கள் புகழுரையை முடித்து, ஸ்ரீஸ்வாமிக்கு ஒரு பொன்னுடையும் ஒரு சால்வையும் கரகோஷத்துடனும், ஸ்ரீமத் அண்ணங்கராசார்ய ஸ்வாமிகளே இன்னும் ஒரு நூற்றாண்டிரும் என்ற ஜனங்களின் வாழ்த்துரையுடனும் கனபாடிகளின் வேதமந்திரோச்சாரணத்துடனும் போர்த்தி, தேங்காய் தாம்பூலத்துடன் பொற்கிழியை அவருடைய திருவடிகளில் ஸமர்ப்பித்து அஞ்சலி செய்தார்.

பிறகு கங்காப்பிரவாஹமோ காவிரிப்பெருக்கோ என்னலாம்படி ஸ்ரீமத் அண்ணங்கராசார்ய ஸ்வாமி ஏறக்குறைய இரண்டரை மணிநேரம் "ராமகுணாநுபவம்" என்னும் விஷயத்தைப்பற்றிப் பிரவசனம் செய்து ஸ்ரீராமநவமி உத்ஸவத்தைத் துவக்கிவைத்தார். அவருடைய உபந்யாஸம் என்ற வெள்ளத்தில் அடித்துக்கொண்டு வந்த வேத ப்ரமாணங்கள் உபநிஷத் வாக்யங்கள் ஆழ்வாரருளிச்செயல்கள் ஆசார்யஸ்தோத்ரங்கள் வ்யாக்யான ஸ்ரீஸூக்திகள் என்றிப்படி வைதிகவுலகிலுள்ள எல்லா நூல்களும் போட்டியிட்டுக்கொண்டே காட்சியளித்தன. கூட்டத்தில் இருந்த ஆயிரக்கணக்கான மக்களில் இப் பிரவசனத்தைப் புகழாதவர் யாரும் இல்லை. குண்டூசி விழுந்தாலும் அதன் ஓசை கேட்கும்படி அவ்வளவு நிச்சப்தமாக, எல்லாரும் உபந்யாஸத்தில் ஈடுபட்டிருந்தனர். பலர் அவர் பேச்சை டேப் ரிகார்ட் செய்துகொண்டனர். பளிச் பளிச் என்ற மின்னல் போட்டோக்கள் எடுக்கப்பட்டவை கணக்கில் அடங்கா. ஸ்ரீமத் பரமஹம்ஸ ஸ்ரீமந்நாராயண ராமாநுஜஜீயர், உபஜனாதிபதி ஸ்ரீ பாடக், மத்திய கவர்ன்மெண்ட் மந்திரிகள் டாக்டர் கே. எல். ராவ், ஐ. ஜே. குஜரால் முதலானோர் அனுப்பிய வாழ்த்துச் செய்திகள் படிக்கப்பட்டன.

ஸ்ரீராமமந்திர் ஸெகிரெடரியான அடியேன் ஸ்ரீராமநவமி கமிட்டியின் சார்பாக ஸ்ரீஸ்வாமிக்கு க்ருதஜ்ஞதையைத் தெரிவித்தபின்பு கூட்டம் இனிது கலைந்தது

ஸ்ரீராமநவமி உத்ஸவம் 21—3—71 லிருந்து 4—4—71 வரை காலையில் திருமஞ்சனம் வேதபாராயணம் திவ்யப்ரபந்தஸேவை அர்ச்சனைகள், மாலையில் வித்வான் ஸ்ரீவில்லிபுத்தூர் ஸ்ரீ R. கண்ணன் ஸ்வாமியின் இராமாயண காலக்ஷேபம் கோஷ்டி விநியோகம் என்ற நிகழ்ச்சி முறையில் ஆயிரக்கணக்கான பக்தகோடிகளால் கலந்துகொள்ளப்பட்டு மிகச் சிறப்பாக நடந்தது. சுபம்! சுபம்!! சுபம்!!!

A. Ramanujachari, B A,
Pandara Road, New Delhi-3,

ஸ்ரீ:

# தம்பிகளிருவரின் தலைதாழ்த்தி விண்ணப்பம்

## (D கிருஷ்ணமூர்த்தியும், V. N. தேவநாதனும்)

நமது சுவாமிகளுக்கு உடன்பிறந்த தங்கை தமக்கைகள் உண்டேயொழியத் தம்பிகள் இல்லையென்பது பிரசித்தம். ஆனால் எங்களிருவரையும் நமது ஸ்வாமி உயிர்த்தம்பிகளாக அபிமானித்திருப்பது உலகப்பிரசித்தம் தந்தை சொற்கொண்டு வனத்திற்கெழுந்தருளிய இராமன் வேடர்தலைவனை குகனையும் குரக்கரசனை சுக்கிரீவனையும் அரக்கர் கோமகனை விபீடணனையும் தம்பிகளாகத் திருவுள்ளம் பற்றினதாய் நமது சுவாமிகளின் உபந்யாஸத்தில் கம்பர் பாசுரமொன்றைக்கொண்டு நெஞ்சுருக சாதித்ததைக் கேட்டிருக்கிறோம். அந்தவகையில் ஸ்ரீசுவாமிகள் எங்களைத் தம்பிகளாகத் திருவுள்ளம்பற்றியதில் வியப்பில்லை யன்றோ சமீபத்தில் சுவாமிகள் நடத்திய வடநாட்டுச் சிறுயாத்திரையில் நாங்களும் உடன்சென்று ஆங்காங்கு சுவாமிகளின் பெருமைகளைக் கட்கூடாக அநுபவித்தோம். அவைகளில் ஒன்றை இங்கே குறிப்பிடுகிறோம்.

8—3—71ல் புறப்பட்டு 27—3—71 வரையில் கீழ்க்கண்ட ஊர்களில் ஸ்னான கட்டத்துக்கும், சேவைகளுக்கும் சென்றிருந்தோம்.

பம்பாய், பரோடா, அஹமதாபாத், நாதத்துவார், ரிஷிகேஸம், விருந்தாவன், மதுரா, விஜயவாடா இவ்விடங்களில் உள்ள பெரிய பண்டிதர்களும் மஹந்துகளும், பக்தகோடிகளும், தனவந்தர்களும் ஸ்ரீ சுவாமிகளுக்கு அமோக வரவேற்பு கொடுத்து இரவு என்றும் பகல் என்றும் நடுநிசி குளிர் என்றும் பாராமல் ஸ்டேஷன்களில் காத்திருந்து அழைப்புதந்து மிக வசதியான ஜாகைகள் கொடுத்து எங்கள் குழுவினர் அனைவரையும் உபசரித்து வழியனுப்பிய காட்சியானது இன்னமும் எங்கள் மனதைவிட்டு அகலவில்லை மேலும் நிகழ்ச்சிகளை எழுதப்புகுந்தால் நெடுகும். இத்துடன் இதை நிறுத்திக்கொள்வோம். ஸ்ரீகாஞ்சியில் ஸ்வாமி திருமாளிகையில் 14 நாள் நிகழ்ந்த திவ்ய அற்புத நிகழ்ச்சிகளையும் பெரும்பாலும் உடனிருந்து அநுபவித்தோம். பல பண்டிதர்கள் தங்கள் தங்கள் கல்வித்திறனுக்கேற்பக் கவிதைகளை இயற்றி ஸ்வாமியைப் பாராட்டினார்கள். கல்விகற்காத நாங்கள் அப்படிக்கு ஆசைப்படுவதில் பயனில்லை. ஆனாலும் ஆசைக்கு அளவு தனுாண்டோ? "அணில் சேவை மணல் சேவை" என்பர்களே அதுபோல நாங்கள் செய்யும் சிறு சேவை இதுவே எதுவென்றால், தினமணி, சுதேசமித்திரன், இண்டியன் எக்ஸ்பிரஸ், ஹிண்டு, Free India, பக்தன், ஆனந்தவிகடன், கல்கி முதலிய தினசரிப் பத்ரிகைகளில் நம் ஸ்வாமியைப்பற்றி வெளிவந்திருக்கும் கட்டுரைகள் உலகம் முழுவதும் பரவியிருந்தாலும், அன்பர்கள் அவற்றையெல்லாம் ஒருங்கே படித்தும் அடிக்கடி படித்தும் இன்புற வேணுமென்னும் அவாவினால் அவற்றையெல்லாம் ஒன்றுசேர்த்துப் பதிப்பித்து சுவாமிகளின் திருவடிகளில் சமர்ப்பித்து ஸ்ரீராமாநுஜனில் வெளியிடச் செய்யவேணுமென்று தோன்றினபடியால் இதைப் பெரிய தொண்டாக மதித்துச் செய்கிறோம்.

# மஹாவித்வான் காஞ்சீ. ப்ர. அண்ணங்கராசார்ய ஸ்வாமி

### பக்தன் ஆசிரியனும், உரிமையாளனுமான
### ஸ்ரீ எம். ஒ. அழகியசிங்கராசாரி, B Sc., B L.

---

மஹாவித்வான் அண்ணங்கராசார்ய ஸ்வாமிக்கு என்னுடைய அஞ்சலி. ஸ்ரீ ஸ்வாமியினுடைய வித்வத்தைப் பற்றி எழுதுவதற்கு அர்ஹதையுள்ளவர்கள் இப்பொழுது இந்த உலகத்தில் யாரும் இல்லை என்பது என்னுடைய மிகவும் தாழ்ந்த அபிப்பிராயம். இந்த அபிப்பிராயத்தை பல பண்டிதர்கள், வித்வான்கள் முதலியோர் கட்டாயம் ஆமோதிப்பார்கள் என்று நான் நம்புகிறேன்.

ஸ்வாமியினுடைய வித்வத்தனத்திற்கு அவர் எழுதிய குறைந்தது 500 புஸ்தகங்களும், ஆயிரத்துக்கும்மேல் இருக்கும் வியாஸங்களுமே சான்ருகும்.

நான் படிக்காதவன், ஆகையினுல் அவருடைய வித்வத்தைப்பற்றி என்னுல் ஒன்றும் சொல்லமுடியாது ஆனுல் பக்தன் 1949ல் ஆரம்பித்தது முதல் சுமார் பத்து வருஷங்கள் கௌரவ ஆசிரியராக இருந்து பக்தனுக்கு பற்பல விஷயங்களில் உதவிசெய்தவரும் நமது மஹாவித்துவானுமான ஸ்ரீ கார்ப்பங்காடு வெங்கடாசார் ஸ்வாமி அவர்கள் ஸ்ரீ அண்ணங்கராச்சார் ஸ்வாமி அறுபதாவது ஆண்டு கொண்டாட்ட விசேஷ மலரில் எழுதிய கட்டுரையில் ஸ்ரீ ஸ்வாமியவர்களுடைய வித்வத்தைப் பற்றிக் கொண்டாடி அவரை ஸ்ரீமணவாள மாமுனிகளின் அபராவதாரமென்று எழுதியிருப்பதிலிருந்தே ஸ்ரீ அண்ணங்கராசார் வித்வத்தைப்பற்றி எவ்வளவு உன்னதமான அபிப்பிராயம் மஹாவித்வான்கள் வைத்திருக்கிருர்கள் என்பது விளங்கும்.

என்னுடைய ஸொந்த அநுபவத்தின்மூலம் நான் ஸ்ரீ ஸ்வாமியினுடைய மனுஷ்யத்தனத்தைப்பற்றிச் சொல்லமுடியும்.

ஸ்ரீ ஸ்வாமி நிஜமான ஸ்ரீ வைஷ்ணவர். ஸ்ரீ மகாத்மா காந்தியால் போற்றப்பட்ட யோகி நர்ஸிமேடா அவர்களால் ஒரு வைஷ்ணவன் என்பவன் எப்படி இருக்கவேண்டும், இருப்பான் என்பதை "வைஷ்ணவ ஜனதோ' என்ற பாட்டில் எழுதியிருக்கிருர். அந்தப் பாட்டில் எழுதிய குணங்கள் அனைத்தும் நமது ஸ்ரீ P. B. A ஸ்வாமியிடத்தில் பரிபூர்ணமாக இருக்கிறது.

ஸ்வாமி 80 வயது ஆனுலும் எல்லோருடனும் ஒரு குழந்தைபோல் பழகுகிருர். இந்த வயதிலும் அவர் செய்யும் உழைப்பை நமது ஸ்ரீ ராஜாஜியின் உழைப்புக்கு ஒப்பிடலாம்.

என்னிடம் அனேகம் பண்டிதர்களும், வித்வான்களும் "நாங்கள் எல்லோரும் ஸ்ரீ P. B. A. ஸ்வாமியின் புஸ்தகங்களைப் படித்து, அவர் என்ன சொல்லியிருக்கிருரோ அதைத்தான் சொல்லிக்கொண்டு பிழைக்கிருேம் என்று சொல்லியிருக்கிருர்கள்.

ஸ்ரீ P. B. A. ஸ்வாமி மஹா பெரும் மஹா வித்வான் மாத்திரம் அல்ல; ஒரு மஹான். இப்படிப்பட்ட மஹான்கள் பல ஆயிரம் வருஷங்களுக்கு ஒருமுறைதான் தோன்றுவார்கள். நமது ஸ்ரீ ராஜாஜியும் நமது P.B.A. ஸ்வாமிகளும் எதிராஜரைப் போல் 125 வருஷங்களுக்குக் குறையாமல் திடகாத்திரத்துடனும், ஸகல ஸௌபாக்யத்துடனும் இருந்து நம் எல்லோரையும் உஜ்ஜீவிப்பிக்குமாறு ஸ்ரீ பகவானிடம் பிரார்த்திக்கிறேன்.

இப்படிக்கு—பக்தன் ஆசிரியர்.

8—4—71ல் சுதேசமித்திரனில் வெளியானது—

# ஆயிரம்பிறைகண்ட காஞ்சி அண்ணங்கராசாரியர்

(பேராசிரியர் எஸ். வி. வரதராஜ அய்யங்கார்)

---

உலகோர் உய்ய ஸ்ரீபாஷ்யம் கீதாபாஷ்யம் முதலான க்ரந்தங்களை அருளிச்
செய்து கண் திறந்து விட்டவர் எம்பெருமானார். ஆழ்வார்களின் அருளிச் செயல்
களை உலகிற்களித்த உத்தமர் நாதமுனிகள் அருளிச்செயல்களுக்கு ஈடில்லாத
ஈடளித்தவர் நம்பிள்ளை; தமிழ்நாட்டிலுள்ள திவ்ய தேசங்களேயன்றி ஏனைய
பிரதேசங்களிலுள்ள திருப்பதிகளிலும் திருப்பல்லாண்டு முதலான அருளிச்செயல்
களை முழங்க முன்னேற்றிய ஸ்ரீ மணவாளமாமுனிகள். ஆழ்வார்களும் ஆசார்ய
புருஷர்களும் வளர்த்த இந்தத் தரிசனத்திற்கு மூலபுருஷர் எம்பெருமானார் ஆவார்.
இதனாலேயே "எம்பெருமானார் தரிசனம்" என்று பேரிட்டு நம் பெருமாளால் நிலை
நாட்டப்பெற்றது இத்தரிசனம் தெவிட்டாத தெள்ளமுதமாகிய ஸ்ரீஸூக்திகளை
அருளி நம் தரிசனத்தைப் பின்னும் பிரகாசப்படுத்தியவர் சுவாமி தேசிகன் ஆவார்.
ஸ்ரீபகதத் ராமாநுஜ கிரந்தமாலை ஸ்ரீவேதாந்த தேசிகர் க்ரந்தமாலை, ஸ்ரீவரவர முனி
க்ரந்தமாலை என்னும் மூன்று மாலைகளாக சகல க்ரந்தங்களையும் நமக்களித்து உகப்
பவர் நம் பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்யர் ஸ்வாமி "செயற்கரிய செய்
வார் பெரியர்" என்னும் திருக்குறளுக்கு இலக்கியமாக விளங்குபவர் இவரேயன்றோ?
மணவாள மாமுனிவன் பொன்னடியாம் போதுகளைப் பற்றிய அஷ்டதிக் கஜங்களில்
ஒருவர் பிரதிவாதி பயங்கரம் அண்ணாஸ்வாமி; நம் காஞ்சிஸ்வாமி அந்த மரபிலே
தோன்றிப் பூருவாசாரியர்கள் போத மநுஷ்டானங்கள் யாவும் ஓர் ஆசாரியரிடம்
குடிபுகுந்து விளங்குகின்றன என்னலாம்படி நாடும் நம்மனோரும் உய்ய அவதரித்
தவர் நமது காஞ்சி பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராச்சார்ய ஸ்வாமி.

ஆயிரம் பிறைகண்டவராகிய நம் ஆசார்ய புருஷர் அறுபதாண்டுகளுக்கு
மேலாகச் செய்துள்ள உபகாரத்தை எடுத்துரைக்க எவரால் இயலும்! எவரேனும்
உரைக்க முன்வரின் அது, "ஓசை பெற்றுயர் பாற்கட லுற்றொரு பூசை முற்றவும்
நக்குபு புக்க" தாகவே முடியும் என்பது ஒருதலை. சாதாரண என்று பெயர்பெற்ற
இந்த அசாதாரண ஆண்டில் ஸ்ரீமணவாள மாமுனிகளின் அறுநூறுவது ஆண்டு
விழாவை அருமை பெருமைகளோடு நாடும் நகரமும் நன்கறிய எங்கும் கொண்டாடி
னோம். விசாக நட்சத்திரத்தில் அவதரித்த நம்மாழ்வாரைப்போல அதே விசாகத்
தில் தோன்றிய நமது காஞ்சி சுவாமியின் எண்பத்தோராவது பிறந்ததின விழாவை
யும் பண்புடன் பாரிப்புடன் நிகழ்த்துகின்றோம். இப்பேறு நமக்கே கிடைத்துள்
ளது நம் முன்னோர்க்கும் பின்னோர்க்கும் கிட்டாத பெரும்பேறு இது என்பதை
நினைக்க நினைக்க நமது உள்ளம் பூரிக்கின்றது.

நம் காஞ்சி ஸ்வாமி வேதம் மணக்கும் வாயர்; அருளிச் செயலை அனுயாச
மாக வாரி வழங்கும் வள்ளல்; தமிழ் இலக்கிய இலக்கணங்களில் கரைகண்டவர்;
சொல்லுதலில் வல்லவர், சோர்வில்லாதவர்; தண்டு காலூன்றித் தளர்ந்து நடக்கும்

இந்நாளிலும் உள்ள முதிர்ச்சியும் இடையருத உழைப்பும் உடையவர்; சீலத்திற்கு இருப்பிடம்; சௌலப்யமும் சாந்தமும் ஔதார்யமும் உடையவர்; ஆழ்வார்களின் ஈரச்சொல் மட்டிலுமன்றி சம்ஸ்க்ருதம் தெலுங்கு இந்தி முதலான மொழிகளிலும் எழுதவும் பேசவும் வல்ல பன்மொழிப் புலவர்.

அருளிச் செயலின் சாரார்த்தங்களாகிய அமுதைத் திரட்டி நமக்கு ஏற்ற வாறு ஊட்டும் இதத் தாயாக விளங்கும் நமது காஞ்சி ஸ்வாமியின் சதாபிஷேக வைபவத்தைத் தமிழ் நாட்டில் மட்டுமன்றி வடக்கே டில்லிக்கப்பாலும் கொண்டாடு வதை நம்மனோர் கடமையாகக் கொண்டு போற்றுகின்றனர். கிடைத்தற்கு அரிய இவ்வைபவத்தில் "குரங்குகள் மலையை நூக்கக் குளித்துத்தாம் புரண்டிட்டோடித் தரங்கநீர் அடைக்கலுற்ற சலமிலா அணில்" போல நாமும் நம்மாலியன்ற அளவிலே ஈடுபட்டு நம் பெரியோர்களான பரமாசாரியர்களை நம்மவர் நித்தமும் வாழ்த்தும் முறைப்படி நாமும் "இன்னுமொரு நூற்றாண்டிரும்" என்று வாழ்த்துவோமாக. ...

---

12—4—71ல் தினமணியில் வெளியானது—

## அண்ணங்கராச்சாரியார்சேவைக்குப் பாராட்டு

### சென்னையில் சதாபிஷேக விழா.

---

காஞ்சி மகாவித்வான் பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியாரின் சதாபிஷேக (81-வது பிறந்ததினம்) விழாவையொட்டி அவருடைய சேவைகளைப் பாராட்டி 8001 ரூபாய் கொண்ட பணமுடிப்பு அன்னாருக்கு வழங்கப்பட்டது.

வேத விற்பன்னரும், ஆராய்ச்சித் திறன்மிக்க உபன்யாசகருமான ஸ்வாமி களின் ஆழ்ந்த வடமொழி ஞானத்தைப் பாராட்டிப்பேசிய பிரமுகர்கள், அவர் ராமா நுஜர் போல 125 ஆண்டுகள் வாழவேண்டும் என்று வாழ்த்தினர்.

சதாபிஷேக கொண்டாட்ட விழா, திருவல்லிக்கேணி பார்த்தசாரதி ஸ்வாமி சன்னிதியில் ஸ்ரீமன் நாராயண ராமாநுஜ ஜீயர் தலைமையில் நடைபெற்றது. விழா ஆரம்பமாவதற்கு முன்பு மூன்று ஜீயர் ஸ்வாமிகளும் அண்ணங்கராசாரிய ஸ்வாமி களும் திருவல்லிக்கேணியில் உள்ள வானமாமலை மடத்திலிருந்து ஊர்வலமாக வந்தார்கள், கோவில் வாசலில் ஆசாரிய புருஷாளுக்குரிய கோவில் மரியாதைக ளுடன் அவர்களுக்கு வரவேற்பு கொடுக்கப்பட்டது. ஸ்வாமி சன்னிதியிலும், தாயார் சன்னிதியிலும் தரிசனம் முடிந்து விழா மேடைக்கு வந்தனர்.

சத் காலட்சேப சபையின் தலைவர் திரு வி. ஜகன்னாத செட்டியார் அனைவரை யும் வரவேற்றுப் பேசினர். பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரிய ஸ்வாமி களின் சேவைகளைப் பாராட்டிப் பேசிய அவர் ஸ்வாமிகளின் நூல்களை அனைத்து மொழிகளிலும் மொழிபெயர்க்க வேண்டும் என்று யோசனை கூறினர்.

சதாபிஷேகப் பாராட்டுவிழா நிகழ்ச்சிகளை பரமார்த்த பூஷணம் நாதெள்ள சம்பத்து செட்டி துவக்கி வைத்தார். திரு. ஏ. சீனிவாச அய்யங்கார் வாழ்த்துச் செய்திகளைப் படித்தார்.

"அண்ணங்கராசாரியார் அவதார புருஷர்" என்று வழக்கறிஞர் ஸ்ரீ உ.வே. வி. என். வெங்கடவரதாச்சாரியார் பாராட்டிப்பேசினார்.

"வைஷ்ணவ உலகின் மகான்" என்று முன்னாள் அமைச்சர் திரு. கே. வெங்கடசாமி நாயுடு பாராட்டி, அன்னார் 120 ஆண்டுகள் நீடூழி வாழப் பிரார்த்தித்தார்.

"ஸ்ரீவைஷ்ணவத்தைப் பிரபலப்படுத்திய மகான்" என்று திரு. கே. எஸ். செம்பகேசுவர அய்யங்கார் கூறினார்.

திரு. ஆர். பத்மநாபன் (ஐ. ஏ. எஸ்.) பாராட்டிப் பேசுகையில், "அண்ணங்கராசாரியாரின் அரிய கிரந்தங்களை எல்லா மொழிகளிலும் மொழிபெயர்க்க வேண்டும்" என்று கேட்டுக்கொண்டார்.

"ஸ்ரீவைஷ்ணவ சுதர்சனம்" ஆசிரியர் ஸ்ரீ கிருஷ்ணசாமி அய்யங்கார் பேசுகையில், ஸ்ரீரங்கத்தில் தென்னாசாரிய சம்பிரதாயம் உருவாக ஒரு பீடம் அமைய வேண்டும் என்று யோசனை கூறினதோடு இந்த பீடத்தில் பாட புத்தகங்களாக அண்ணங்கராசாரிய ஸ்வாமியின் நூல்களையே வைத்து காலக்ஷேபப் பயிற்சிக்கும் ஏற்பாடு செய்யலாம் என்றும் அவர் சொன்னார்.

திருப்பதி பெரிய ஜீயர் ஸ்ரீராமாநுஜவாரு பாராட்டிப் பேசுகையில், இளம் தலைமுறையினருக்கு நல்வழி காட்ட நீடூழி வாழ வாழ்த்தினார்.

தலைமை வகித்த திரு. திருதண்டி ஸ்ரீமன் நாராயண ராமாநுஜ ஜீயர் பேசுகையில், அண்ணங்கராசாரியாரின் ஆழ்ந்த உபயவேத ஞானத்தைப் பாராட்டினார். பாமர மக்களுக்கும் இலகுவில் புரியும்படியாக எழுதியுள்ள இவருடைய நூல்கள் அனைத்தும் வெளியிட ஏற்பாடு செய்யவேண்டும் என்றார். "இன்று நாட்டில் உள்ள உபன்யாசகர்களில் பாதிக்கு மேற்பட்டவர்களை உருவாக்கியவர் அண்ணங்கராசாரியரே" என்றும் பாராட்டி, "வைஷ்ணவ சம்பிரதாயங்களைப் பற்றித் தெரிந்து கொள்ள இவருடைய நூல்களே போதும்" என்றார். காஞ்சீபுரம் அழகிய மணவாள ஜீயர் ஸ்வாமிகளும் பாராட்டிப் பேசினார்.

விழாக்குழுவின் சார்பில் 8001 ரூபாய் அடங்கிய பணமுடிப்பை வழங்கி V. எம்பெருமானார் செட்டி பேசுகையில், அண்ணங்கராசாரியாரைக் கலைக்களஞ்சியம் என்று வருணித்தார்.

பாராட்டுதல்களுக்கு நன்றி தெரிவித்து திரு. அண்ணங்கராசாரியார் பேசுகையில் மனம் கொண்டு செய்த சன்மானத்திற்குப் பெரிதும் கடமைப்பட்டுள்ளதாகச் சொன்னார். மக்களிடம் மேலும் பக்தியைப் பரப்பவும், பக்தி மார்க்கத்தில் ஈடுபடவும் அவா பெருகவேண்டும் என்றார் அவர். நல்ல தர்மநெறிகளை கடைப்பிடித்து நடக்கத் தமது நூல்கள் உபயோகமாக இருக்கும் என்று நம்புவதாகவும் அவர் சொன்னார்.

இந்து அறநிலையத் துணைக் கமிஷனர் திரு. வெங்கடாசலம், எஸ். வி வரதராஜ அய்யங்கார், C ராதாகிருஷ்ணன் ஆகியோரும் பாராட்டிப் பேசினர்.

திரு. பி. வெங்கடசாமி நன்றி கூறினார்.

---

கல்கியில் வெளிவந்தவை—

# ஆயிரத்தைக் கண்டவர்

## சூரிக்கத்திக்கு வேலையில்லை

அறுபது வருடங்களுக்கு முன்பு சென்னை-திருவல்லிக்கேணியில் நிகழ்ந்தது.

பத்தொன்பது வயது வாலிபர், சபையோர் முன்பு நின்றுகொண்டிருந்தார். வேதாந்த பண்டிதர்கள் கூடியிருந்தனர்.

திவ்வியப்ரபந்தங்களிலிருந்தும், ரகசிய கிரந்தங்களிலிருந்தும் கேட்கப்படும் கேள்விகளுக்குப் பதில் சொல்லவேண்டும்! கேள்விக்குப் பதில் சொல்லத் தவறினுல் சபையோர் முன்பு, நாவை, சூரிக்கத்தியினுல் அறுத்துக்கொள்ள வேண்டும்!...

இந்தக் கடும் நிபந்தனைக்கு உடன்பட்டு நின்ற வாலிபர் சூரிக்கத்திக்கு வேலை இல்லாமல் செய்து வெற்றி பெற்ருர். சன்மானங்கள் குவிந்தன. வாலிபப் பிராயத்திலேயே இக் கடினமான பரீக்ஷையில் வெற்றிபெற்றவர் காஞ்சிபுரம் பிரதிவாதி பயங்கரம் ஸ்ரீ அண்ணங்கராசாரியார் சுவாமிகள்.

இவரது எண்பதாண்டு நிறைவு விழா அண்மையில் மிகச் சிறப்பாகக் காஞ்சியிலும் சென்னையிலும் கொண்டாடப்பட்டது.

சில மணி நேரம் அவரது இல்லத்தில் இருந்தால் அவர் அஷ்டாவதானம் செய்யும் காட்சியைப் பார்க்கலாம்.

'ஸ்ரீராமாநுஜன்' என்னும் மாத இதழின் 'புரூப்' பார்த்து முடிக்கிருர். உடனே, 'எக்ஸ்பிரஸ் தபால்களுக்குக் கைப்படக் கடிதம் எழுதி உறையின்மீது முகவரி எழுதி, அவரே அதனை ஒட்டி முடிக்கிருர்! எழுபத்தொன்பது வயதிலும் என்ன சுறுசுறுப்பு! அச்சாகும் புத்தகங்களின் 'ஃபாரங்கள்' பார்வைக்கு வருகின்றன; சென்னையிலிருந்து வந்திருக்கும் ஆப்த சீடர்களுடன் உரையாடல்; வெளியூர் வாசிகளின் கேள்விக்கு வேதாந்த விளக்கமான பதில்; இவை முடிந்தவுடன், எழுத்துவேலை தொடங்குகிறது. வேதாந்தக் கட்டுரை ஒரு வெளியூர் மலருக்கு!... கட்டுரை எழுதியானவுடன் மிகப்பெரிய 'பைண்டு வால்யூம்' களைப் புரட்டி, குறிப்புக்கள் எழுதி, பக்க அடையாளம் செய்துகொள்கிருர்!

இப்படியாகக் காலை முதல் மாலை வரை தினசரி ஓய்வின்றி அலுவல்கள். இவையெல்லாம் பிரதிதினமும், வேதபாராயணம் செய்து வீதிப் பிரதட்சிணம் முடிந்தவுடன் நடைபெறும் நிகழ்ச்சிகளாகும்!

'ஆயிரத்தைக் கண்டவர்' என்ருல் ஒன்றிரண்டு துறைகளில் மட்டுமல்ல!

மூவாயிரத்துக்கும் மேற்பட்ட காலட்சேபங்கள் நிகழ்த்தியிருக்கிருர்—நாடு முழுவதும்.

ஆயிரத்து இருநூறுக்கும் மேற்பட்ட கட்டுரை நூல்கள் வரைந்திருக்கிருர்—வேதாந்த விளக்கம், சர்ச்சை, வரலாறு, விமரிசனம், வியாக்கியானம் போன்றவை. எண்ணூறு நூல்கள் எழுதி, வெளியிட்டிருக்கிருர் !

இவருடைய முதல் புத்தகம்—1908ல், பம்பாயில் வெளியிடப்பட்டது. சமஸ்க்ருத மொழியில் வெளிவந்ததாகும். நூறு பக்கங்கள் எட்டணு விலை. காகிதம் இன்னும் வெண்மையுடன் இருக்கிறது.......!

"தாங்கள் எழுதிய புத்தகங்களில் அதிககாலம் செலவிட்டு எழுதிய புத்தகம் எது என்பதை தெரிவிக்கவேண்டும்" என்றேன்.

"நாலாயிர திவ்யப் பிரபந்தம்—வியாக்கியானப் புத்தகம் எழுதப் பத்து வருடங்கள் ஆயிற்று. 1927 முதல் 1937 வரை எழுதினேன். எட்டாயிரம் பக்கங்கள்! இப்போது அப்புத்தகத் தொகுதிகள் நாலாவது பதிப்பாக வெளியாகப் போகின்றன. அச்சு வேலைகள் நடக்கின்றன... .." என்ருர்.

"தாங்கள் எத்தனை மொழிகளில் நூல்களைப் பிரசுரித்திருக்கிறீர்கள்?"

"தமிழ், சம்ஸ்கிருதம், தெலுங்கு, இந்தி, ஆங்கிலம் எனப் பதில்தெரிவித்தார்.

'ஸ்ரீராமாநுஜன்' எனும் பெயர்கொண்ட மாத இதழ் தமிழ், தெலுங்கு, சமஸ்கிருதம், இந்தி ஆகிய மொழிகளில் பிரசுரமாகிறது. அதன் ஆசிரியரும் இவரே. முப்பத்திரண்டு வருடங்களாக வெளியிடப்பெற்று வருகிறது.

ஸ்ரீ அண்ணங்கராசாரியாரிடம் கேட்டேன் : "ஐந்து வருடங்களுக்கு முன் சென்னை சம்ஸ்கிருதக் கல்லூரியில் பேசிய திரு. ஜி. டி. பிர்லா, இந்தியாவில் நல்ல சம்ஸ்கிருத அகராதி கிடைக்கவில்லை. ஜெர்மனியில் இருநூறு பவுன்களுக்கு (சுமார் மூவாயிரத்து ஐந்நூறு ரூபாய்) வாங்கினேன் என்ருரே, அப்படியொரு அகராதி வெளியாகவில்லையா? "

"ஸ்ரீ பிர்லா சொன்னது சரிதான். நல்ல சம்ஸ்கிருத அகராதி வெளியிடும் முயற்சியில் எனக்கும் பங்கு உண்டு. அகராதி வேலைதொடங்கி ஐந்து ஃபாரங்கள் மூடிந்திருக்கின்றன. அந்த வேலை தற்போது தடைப்பட்டிருக்கிறது ...!" என்று பதில் தந்தார்.

சென்னையில் நாற்பத்தைந்து வருடங்களாக, மார்கழி மாதம் முப்பது நாட்களும் ஆண்டாள் திருப்பாவை உபந்யாசத்தைத் தொடர்ந்து நடத்தி வருகிருர்.

கணீரென்ற குரலில், கேட்போரைப் பரவசப்படுத்தும் அவரது விரிவுரைகள் ஒரு நாள் கேட்டால் போதும். தொடர்ந்து கேட்கத் தோன்றும்.

—பேட்டி ; ஏ. சுவாமிநாதன்.

11—4—71 தினமணி சுடர் அனுபந்தத்தில் வெளியானவை—

# சதாபிஷேகம் காணும் பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்யர்

[கெ. பி. ஸ்ரீ.]

மெய்ஞ்ஞானி காமகோடி பீடாதிபதி, விஞ்ஞானி டாக்டர் கே. எஸ். கிருஷ்ணன், சட்டஞானி எஸ். வரதாசாரி, தமிழ்ஞானி மகாமகோபாத்யாய உ. வே. சாமிநாதையர், சம்ஸ்கிருதஞானி, மகாமகோபாத்யாய சிதம்பரம் தண்டபாணி தீட்சிதர், அரசியல்ஞானி பாபு ராஜேந்திர பிரசாத் போன்ற பலதுறைத் தலைவர்களின் பேரபிமானத்தைப் பெற்றவர் காஞ்சி மகாவித்வான் பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரிய ஸ்வாமி. ஆழ்ந்த வேதஞானமும், ஆராய்ச்சித் திறன்மிக்க உபயவேதாந்தப் புலமையும், எழுத்தாற்றலும், சொல்லாற்றலும் ஒருங்கே அமையப்பெற்றவர் என்பதே எல்லோருடைய கவனத்தையும் கவர்ந்துள்ளது.

நாளை பங்குனி விசாகத்தன்று ஸ்ரீ அண்ணங்கராசார்யரின் சதாபிஷேகம் நிகழ்கின்றது. இந்நாளில் அவரது நீண்ட வரலாற்றை அனுபவிப்பது உலகத்துக்கு உவகையூட்டுவதாகும். ஆயிரம் பிறை காண்பது அரிது; அதைவிட அரிது ஆயிரம் நூல்கள் வழங்குவது. இவ்வரிய செயல்களைப் புரிந்தவர் பிரதிவாதி பயங்கரம் அண்ணா.

காஞ்சியில் அவதரித்து வடநாட்டில் கோவில்கள் எழுப்பித்த பெருமையை நிலைநாட்டினர் கோவர்த்தனம் ரங்காசார்ய ஸ்வாமியும் பிரதிவாதி பயங்கரம் காதி அனந்தாசார்ய ஸ்வாமியும். அவர்களிடமிருந்து ஊக்கம்பெற்ற அண்ணங்கராசார்ய ஸ்வாமி, இல்லந்தோறும் தம் திவ்யார்த்த தீபிகை, ரஹஸ்ய கிரந்த ஸாரங்கள், வேத பதக்ரம ஆராய்ச்சி நூல்கள் மூலம் ஆலயச் சூழலையும், பகவதனுபவத்தையும் உண்டாக்கி விட்டார். இத்தகைய அறிவாற்றல்களின் விரிவுரையே இவரது வாழ்க்கை ஆகும்.

## இளமைப் பருவம்

விஷ்ணு காஞ்சியில் தென்னண்டை மாட வீதியில் அண்ணா ரங்காசார்யர் சுரோத்திரியம் தாரர். நல்ல வித்வத் சிரோன்மணி. கடைந்தெடுத்த பொன் மேனி படைத்தவர் என்று பெரியோர் சொல்லக் கேட்டிருக்கிறேன். அவருக்கும் அலர்மேல் மங்கைக்கும் உதித்த குலமணியே அண்ணங்கராச்சார்யர். நம்மாழ்வார் தம் விசாக நட்சத்திரத்தை இம்மகவுக்கீந்தார். ரஹஸ்ய கிரந்த கர்த்தா பிள்ளை லோகாசார்யர். தம் குலத்தை அருளினார். அவர் வழித் தோன்றலாக முதல் பிரதிவாதி பயங்கரம் அண்ணா தம் திருநாமத்துடன் தம் வாதத் திறனையும் இப்பிள்ளைக்குத் தந்தார்.

தேவராஜஸ்வாமி சன்னிதி வீதியில் வானமாமலை மடத்தில், ஸ்ரீ திருமலை அனந்தாண்பிள்ளை குன்னப்பாக்கம் ஸ்ரீநிவாஸாச்சார்யர் தலைமையில் சம்ஸ்கிருத

பாடசாலை நடந்துகொண்டிருந்தது. அந்நாளில் அவரை குன்னப்பாக்கம் வித்வான் சீமாச்சார் என்றே கொண்டாடுவர், அண்ணாவின் திருத்தந்தை ரங்காச்சாரியார் அங்கு சாஹித்திய (இலக்கியம்), பிரபந்த ஆசிரியராக இருந்தார். இப்பாடசாலையில் எட்டாம் வயதில் சேர்ந்தார் அண்ணா, இங்கு மூன்று ஆண்டுகள் பயின்றார். பின்பு தேவராஜஸ்வாமி சன்னிதியில் நடந்துகொண்டிருந்த சடகோப நிலைய பாடசாலையில் படித்தார். இவருக்கு பாடம் சொல்லித்தந்த மாத்வர்களான ராமச்சந்திராச்சார், அவர்தம் இளைய சகோதரர் வித்யாசார் இருவரிடமும் மகத்தான அன்பு காட்டி இன்றைக்கும் போற்றிவருகிறார். அவர்களுடைய நிகரற்ற போதனாசக்தியை வியந்து பாராட்டுகிறார், இவருக்குள்ள வடமொழி இலக்கிய புலமைக்கு இவர்களும் தந்தையாரும் முக்கியமானவர்.

இவரது தந்தையின் மாமா கிடாம்பி கிருஷ்ணமாச்சாரியர். அவர் கிரந்தம், நாகரி, தமிழ், தெலுங்கு, ஆங்கில லிபிகளை நன்கு கற்றுத் தந்தார். அண்ணாவின் அத்தை மகனான அக்காரம் க்ருஷ்ணஸ்வாமியிடம் சிறிது காலம் ஆங்கிலம் கற்றுக் கொண்டதுண்டு. அவருக்கு சம்ஸ்க்ருதம் கற்றுத்தருவதென்ற உடன்பாடு. ஆனால் அதுமட்டும் நிறைவேறாமல் போய்விட்டது. ஸ்வாமிக்குள்ள தனித்திறமையை இங்கு குறிப்பிடுவது பொருந்தும். ஆழ்வார் பாசுரம் ஏதாவதொன்றை நாம் சொன்னால் அதை அப்படியே ஆங்கில லிபியில் எழுதிக் காட்டுவார். அதோடு இரு கரங்களினாலும் எழுதும் திறமையும் இவர்க்கு உண்டு.

## இளங்கவி

காதி அனந்தாசார்ய ஸ்வாமி அண்ணா சன்னிதியில் வேதாந்த வைஜயந்தி பாடசாலை நடத்தி வந்தார். இங்கு காதி ஸ்வாமியிடம் நியாயம், தர்க்க சாஸ்திரம் வாத கிரந்தங்களை அண்ணா கற்றறிந்தார்.

இத்தகைய இடையறாத பாட சிட்சையினால் ஸ்வாமிக்கு இயல்பாயுள்ள கவிதா சக்தி இளமையிலேயே உரம்பெற்றது. கேரளத்தில் பட்டாம்பியிலிருந்து "விஜ்ஞான சிந்தாமணி" என்ற வடமொழி வாரப் பத்திரிகை வந்துகொண்டிருந்தது. அதற்குக் கட்டுரைகள் கவிதைகள் வினா விடைகள், சித்திர கவிகள் எழுதி வந்தார் அண்ணா. அப்பத்திரிகையின் ஆசிரியர் நீலகண்ட சர்மா இவருக்கு ஆசுகவி சித்திரகவி என்றெல்லாம் விருது சூட்டி ஊக்கமளித்தார். அப்போது சுவாமிக்கு 12 வயதுதான்.

அதேகாலத்தில் தமிழும் சம்ஸ்கிருதமும் கலந்த நடையில், 200 சுலோகங்களில் ராமாயண சுருக்கத்தை எழுதினார். தமிழில் கதைகள் சொன்னால் உடனே சரளமான நடையில் சம்ஸ்கிருதத்தில் மொழி பெயர்த்துவிடுவார்.

ஒரு சமயம் மைசூர் வித்வான் கஸ்தூரி ரங்காச்சார்யார் சமஸ்தான அதிகாரிகளுடன் காஞ்சிக்கு வந்திருந்தார். காஞ்சியிலுள்ள எல்லா வடமொழி பாடசாலை மாணாக்கர்களுக்கும் தேவராஜஸ்வாமி சன்னிதி பாடசாலையில் பரீட்சை வைத்தார்கள்.

## "தங்கக் காப்பு"

மேல் வகுப்பு மாணுக்கர்களுக்கு முராரி எழுதிய "அநர்க்க ராகவம்" நாடகத்திலிருந்து கேள்விகள் தொடுக்கப்பட்டன. அவர்கள் விழிக்கலானுர்கள். அத்தருணத்தில் கீழ்வகுப்பு மாணவனுன அண்ணு நான் சொல்லட்டுமா, என்று கேட்டார். மைசூர் காரர் அனுமதி தந்தார். அவர்கள் கேட்ட சுலோகத்துக்கு விரிவாகப் பொருள் உரைத்தார். இதைக் கண்டு வியந்த பரீட்சைக்காரர் கீழ் வகுப்பிலுள்ள உனக்கு எப்படி இப்பாடம் வந்தது? என்று கேட்டார். தன் அகத்திலேயே பாடசாலை நடப்பதால் பக்கத்திலுள்ள வகுப்புப் பாடங்களையும் கேட்க நேரிடுகிற தென்றும், அது உடனேயே மனத்தில் பதிந்துவிடுகிறதென்றும் அண்ணு பதிலிறுத்தார். மேலும் சில கேள்விகளுக்கு விடை பகர்ந்தார். இப்பரீட்சையில் 2 பவுன் பரிசு கிடைத்தது. பெரியவர்கள் தங்கச் காப்புச் செய்து கையில் போட்டனர். பாடசாலைப் பிள்ளைகள் "தங்கக் காப்பு அண்ணு" என்று பெயர் வைத்து விட்டார்கள். இன்றைக்கும் அண்ணு காலட்சேபங்களில் முராரி நாடகத்திலிருந்து சுலோகங்கள் ஒன்றிரண்டேனும் தலைகாட்டாமல் இரா. அதன் இலக்கிய நயத்தில் அவ்வளவு ரசானுபவம்.

## தாம்பு தண்டனை

குறும்புக்கூத்தன் கண்ணனுக்கு யசோதை தாம்பு தண்டனை விதித்ததுண்டு. அண்ணுவின் வரலாற்றிலும் தாம்பு தண்டனை உண்டு. தந்தை ரங்காச்சாரியார் கண்டிப்பானவர். சிறுவன் குறும்பு செய்தாலும், பாடம் தவறினுலும் கடும் தாம்பு தண்டனை உண்டு. அண்ணு அவருக்கு ஒரே மகன் என்பதும் ஈண்டு நினைவுக் குரியது. இடுப்பில் தாம்புக் கயிறுகட்டி, அப்படியே கிணற்றில் விட்டு தோய்த்தெடுப்பார். அன்புடன் பாடம் புகட்டும் தந்தைக்கு எப்படித்தான் மனம் வந்ததோ என்று நினைக்கலாம். கல்வியில் சிறந்தது ஒழுக்கம் என்பது பெரியவர்கள் சித்தாந்தம்.

சகல ஸ்தோத்திர பாடங்களையும், சம்பிரதாய சாஸ்திரார்த்தங்களையும் சிட்சை சொல்பவரே இந்த சிட்சையும் விதித்தார். ஆங்கிலத்தில் பல்கலைக் கழகக் கல்வியை, 'Discipline' என்றழைப்பதுண்டு, ஒழுங்கும் கல்வியில் சேர்ந்தது போலும்.

அண்ணுவுக்கு 14 வயது ஆகும் காலத்தில் தந்தையார் திருநாடலங்கரித்தார். ஆயினும் பிள்ளையின் பெரும்புகழுக்கு நாற்றிட்டு விட்டார்.

அண்ணுவின் தந்தையின் தாயார் பெருந்தேவி அம்மாள். அவருக்கு முமுக்ஷுப்படி, தத்வத்ரயம், ஸ்ரீவசன பூஷணம் தலைகீழ்ப்பாடமாக வரும்.

## துறவறம் பூணுத துறவி

தந்தை மறைந்த பிறகு காதி அனந்தாசார்யர் ஸ்வாமி திருமாளிகை சிறுவன் அண்ணுவுக்குப் புகலிடமாயிருந்தது. காதி ஸ்வாமிகள் துறவறம் மேற்கொள்ளாமலேயே வெண்ணுடைத் துறவியாக இருந்து "ஜகத் குரு" எனக் கொண்டாடப்

பெற்றவர். நல்ல உபாசகர். பாரத நாடெங்கும் பல்லக்கு, யானை, குதிரை, ஒட்டகம் முதலிய பிருதுகளுடன் திக் விஜயம் செய்தவர். பம்பாயில் பனஸ்வாடியிலுள்ள ஸ்ரீநிவாசப் பெருமாள் கோவிலைக் கட்டியவர். அந்த காதி ஸ்வாமிகளிடம் சாஸ்திர பாடங்கள், ஸ்வரூப கிரந்தங்கள், திருமந்திரார்த்த ஸ்ரீபாஷ்ய, கீதாபாஷ்ய காலக்ஷேபம் கேட்டறிந்தார் நம் அண்ணா; திருநாராயணபுரம் மண்டயம் ஆழ்வார் ஸ்வாமியிடம் வேதாந்த வாதாவளியில் சித்தாஞ்சனம் கற்றார். அப்போது வயது 17.

## "ஜீயர் பேரன்"

கல்வியில் நாட்டம் விடவில்லை. தாய்வழிப் பாட்டனாரான ஷஷ்டி ஸ்வாமி ஜீயராக இருந்தார். அவர் தமிழ் இலக்கிய இலக்கணங்களில் தலைசிறந்து விளங்கியவர். கம்பராமாயணம், நன்னூல் உரைகள் எழுதிப் புகழ்பெற்ற வை. மு. சடகோப ராமானுஜாச்சாரியார் ஜீயரின் சீடரென்பதொன்றே, அவரது புகழுக்குத் தக்க சான்று ஷஷ்டி ஜீயர் சாமவேதி நல்ல சங்கீத சாஸ்திரம் பயின்றவர். அருமையான சாரீரம் படைத்தவர். காலக்ஷேபத்தில் ராகநயம் ததும்பும். இரவில் வீணாகானம் பண்ணுபவர். கம்பராமாயணம், பிள்ளைப்பெருமாளய்யங்காரின் அஷ்டப்ரபந்தம், நன்னூல், நாலாயிரம் எல்லாவற்றையும் "ஜீயர் தாத்தா"விடம் அண்ணா கசடறக் கற்றார். இருபது வயதுக்குள் இதை முடித்தார். சில சமயம் சபைகளில் ஜியர் நியமனத்தினால் உபந்யாசம் செய்துவந்தார் அண்ணா. அப்போதே "ஜீயர் பேரன்" என்ற புகழ் பரவலாயிற்று.

ஸ்ரீரங்கம் தர்மகர்த்தா குவளக்குடி சிங்கமய்யங்கார் அண்ணாவை இளமையில் தம் திருமாளிகைக்கு அழைத்துப்போய் சன்மானங்கள் செய்தார். நல்ல நூல்களை சேகரிப்பதற்கு அவரிடம் உதவிபெற்றார் அண்ணா. இவரைப் போலவே ஸம்பிரதாய சந்திரிகை முதலிய நூல்கள் நம் அண்ணா மூலமாக வெளிவருவதற்கு ஸ்ரீவானமாமலை ஜீயர், சின்ன கலியன் ஸ்வாமி உதவியதும் குறிப்பிடத்தக்கது.

## நூல்கள் வெளியீடு

1908 அல்லது 1909-ல் காஞ்சியில் வித்யோல்லாஸினிசபையில் வைத்த போட்டியில் அண்ணா கலந்து கொண்டார். 3 லேகங்கள் எழுத ஒருவாரம் அவகாசம் தரப்பட்டது. அண்ணா மூன்றே நாளில் எழுதிக் கொடுத்துவிட்டார், அதைப் படித்த சாமா திருமலை தாத்தாசாரியார் மறுநாளே அரங்கேற்றம் செய்தார். அத்தருணம் காஞ்சிக்கு வந்திருந்த பிரபல பம்பாய் பிரசுரகர்த்தர்கள் கேம்ராஜ ஸேட் அதை வாங்கிக்கொண்டுபோய் ஒரு வாரத்துக்குள் "புரூப்" அனுப்பிவிட்டார். 60 ஆண்டுகளாகியும் இப்போதும் அந்த 'பாலகோபதேசமாலிகா" என்ற நூல் கிடைக்கிறது. இதில் தர்மவாதம், ஸ்ரீரங்கநாதப்ராபோதிகப் பிரபந்தப் பிரதிக்ருதி என்ற நூல்களும் அடக்கம்,

பல வைஷ்ணவ கிரந்தங்கள் அச்சேறாத காலத்தில் சம்பிரதாய சந்திரிகா, புருஷகார மீமாம்ஸை, ரஹஸ்யத்ரயகாரிகாவளி, ரஹஸ்ய விவேகம் போன்ற நூல்கள் அண்ணாவால் வெளியிடப்பட்டன. ரஹஸ்யத்ரய மீமாம்ஸா பாஷ்யத்தை

3

வெளியிட வேண்டுமென்ற பேரவா உந்தியது. மயிலையில் பிரபல வக்கீலான எஸ். கோபாலஸ்வாமி அய்யங்கார், முன்னாள் நீதிபதி எஸ். வரதாச்சாரியார், கரலாபாடி ஆழ்வாரய்யா போன்றவர்கள் கைகொடுத்தனர். ஸ்ரீ ஸ்தவம், ஸ்ரீவரத ராஜஸ்தவம்போன்ற ஸ்தோத்ரநூல்களுக்கும் விரிவான உரையெழுதினார் அண்ணா. இவை தெலுங்குலிபியில் அச்சேறின; அந்நாளில் மத்திய சட்டசபையில் சுயராஜ்யக் கட்சி மெம்பராக இருந்த கோவை சி. வி. வேங்கடரமண அய்யங்கார் தம் செலவில் அதை மணிப்ரவாளத்தில் அச்சிட்டு உதவினார். ஸ்வாமியின் நூல்கள் வெளியாவதற்கு என்று ஸ்ரீவைஷ்ண கிரந்த முத்ராபக சபை நிறுவப்பெற்று நடந்தது. 18 வயது முதல் 25 ஆண்டுக்காலம் அண்ணாவுக்கு உதவிவந்த வக்கீல் கோபாலஸ்வாமி அய்யங்காருக்கு சம்பிரதாய சமுதாயம் மிகவும் கடமைப்பட்டுள்ளது.

## காஞ்சியில் எழுதி, பீஹாரில் சமர்ப்பணம்

வானமாலை ஜீயர் சின்ன கலியன் ஸ்வாமிக்கு அண்ணாவிடம் உள்ள வாஞ்சை சொல்லவொண்ணாதது. அவரது நியமனத்தின் பேரில் 'ஆசார்ய ஹ்ருதயசாரம்' எழுதினார். ஆழ்வார்களின் பாசுரங்களை வடமொழியில் இயற்றி வெளியிட்டார். தமிழ்ப் பாக்களின் இசையிலேயே வடமொழி சுலோகங்களை அமைத்தார் அண்ணா. ஸ்ரீவசனபூஷணம், தத்வத்ரயம், முமுக்ஷுப்படி ஆக மூன்று கிரந்தங்களையும் சுலோ கங்களாக இயற்றினார். பீஹாரில் தீர்க்க கட்டம் என்ற நீள் கங்கைக் கரையில் எழுந்தருளியிருந்த சின்ன கலியன்ஸ்வாமியிடம்சென்று சமர்ப்பித்தார். அங்கேயே அரங்கேற்றம் நடந்தது 'ரஹஸ்ய ரத்னமாலிகா'' என்று பெயர்சூட்டி மகிழ்ந்தார் கலியன் ஸ்வாமி. வடநாட்டவர் வியக்கும் வண்ணம் திவ்ய பிரபந்தங்களுக்கு வட மொழி வியாக்கியானங்களை இட்டருளினார். தெலுங்கில் இதுவரை 3300 பாசுரங் களுக்கு விரிவுரை வெளிவந்துள்ளது. இவையெல்லாம் நம் அண்ணாவின் அருமைத் தொண்டுகள்.

## அமுதுமுண்டு ; குறையுமுண்டு

அண்ணாவுக்கு இத்தனை கல்வி அமுதம் உண்ட பிறகும் குறையொன்றுண்டு, வேத மோதவேண்டும் என்ற பேரவா உள்ளத்தில் இரைந்து கொண்டிருந்தது. முழுவேதத்தமுதமாகிய தீதில்சீர் வேங்கடவன் திருக்கோவில் வாசலில் குறைதீர வழி பிறந்தது. வேதகோஷ்டியின் நடுநாயகமாக நின்றிருந்தார் திருமலை விஞ்சிமூர் மாம்பள்ளம் சுதர்சனாச்சாரியார். கணீரென்று எழுந்தது வேதநாதம். அவரை அழைத்துச்சென்று தன் குறையைத் தீர்த்துக்கொள்ள முனைந்தார். சுதர்சனத்தை வேண்டினால் குறையுமுண்டோ?

காஞ்சியின் வரலாற்றில் தீபமாக அமைந்தது சுதர்சனாச்சாரிய சுவாமியின் வருகை. உபய வேத வேதாந்த பாடசாலை நடத்துவதில் முனைப்புக்கொண்டார், அண்ணா வயது 22 தான். பெருமாள் புறப்பாட்டில் வேதகோஷம் சேரவேண்டு மென்ற ஆர்வம். மாம்பள்ளம்ஸ்வாமி முதல் காண்டத்திலிருந்தே துவங்கி சம்ஹிதை பதக்கிரமங்கள், பிராஹ்மணம், கூடவே; சொல்லிக்கொடுக்கும் முறையைக்

கையாண்டார். அண்ணங்கராச்சாரியார் ஏச்சுப் பேச்சுக்களை யெல்லாம் பொருட் படுத்தாமல் சிறு பிள்ளைபோல் வேதம் ஓதலானார். 1913ல் ஜீயர் மடத்தில் சிறுகத் தொடங்கிய பாடசாலை, கீழண்டை மாடவீதியில் இரட்டை மாளிகையில் குடிபுகுந் தது. மாம்பள்ளம் ஸ்வாமியின் வலிதான ஊக்கம் விரைவில் பலன் கொடுத்தது அண்ணங்கராச்சாரியார் வேத பதங்களை நுணுக்கமாக ஆராய்ந்து வேத அத்யய னத்திலும் பெரும்புகழ் கொண்டார். அண்ணாவின் கண்ணில் சுதர்சனாச்சார்ய ஸ்வாமி வேத வியாசராகவே தோன்றினார்.

பாடசாலையிலிருந்து பிரதட்சிண கோஷ்டி புறப்படும் அழகே தனி. வேத அபிமானிகளும், ஆஸ்திகர்களும் இக்கோஷ்டியை சேவிப்பதற்கென்றே வெளியூர் வாசிகள் காஞ்சியில் இராத் தங்குவதுண்டு. ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி உகந்துள்ளார். அவரே சில சமயம் தம்மிடம் வரும் வேத விற்பன்னர்களையும் கோஷ்டிக்கு அனுப்பிவைப்பதுண்டு.

நூல்கள் வெளியீடு, 'மஞ்சுபாஷிணி' (சம்ஸ்கிருதம்) 'பிரஹ்ம வித்யா' (தமிழ்) சஞ்சிகைகள் பதிப்பு, சன்னிதி கோஷ்டி கைங்கரியம், நூல்கள் பதிப்பு முதலியவற்றின் நடுவே வேத படனம் வேறு, 24 மணி நேரம் கொண்டது ஒரு நாள். ஆனால் அண்ணா ஸ்வாமி சளைக்காமல் 20 மணி நேரத்துக்கு மேல் பணி களில் ஈடுபடுவார். சிரமம் தணிவதற்காக பாடசாலை வாசல் சார்மணைத் திண்ணை யில் சிறிது நேரம் அமர்ந்து பள்ளிக்கூடத்திலிருந்து திரும்பும் சிறுவர்களுடன் விளை யாட்டாகப் பேசுவார்.

## வேதாத்யயன ஸர்வஸ்வம்

வேத மோதுபவர்கள் பதம் பிரித்துப் பொருள் உணர்ந்து வேத மிசைக்க வேண்டும் என்று உணர்ந்த அண்ணங்கராச்சார்யார், "வேதாத்யயன சர்வஸ்வம்" என்ற நூலை இயற்றினார். பல வேத வித்துக்கள், கனபாடிகள், இவரது பெரிய ஆற்றலைப் பாராட்டினர். வேதம் அவதரித்த நாள்முதல், இன்றுவரை எவரும் இப்படிப்பட்ட விமர்சனங்களைக் கண்டதில்லை என்று கொண்டாடினர். இரண்டு வேத பாஷ்யங்களையும் கற்றுணர்ந்து இதை எழுதியிருக்கிறார் நம் அண்ணா.

அண்ணாவின் வேத ஆராய்ச்சிபற்றிய வரலாற்றில் ஒரு சம்பவம் குறிப்பிடத் தக்கது. பெரிய வித்வத் சதஸ்களில் முதல் பணி பூர்வபட்சம் (எதிர்க் கட்சி) சொல்வதற்கான தலைவரை நியமிப்பது வழக்கம். 1933—34ல் ஸ்ரீ பூரி சங்கராச் சார்ய ஸ்வாமி சென்னையில் அகில பாரத வேத சதஸ் நடத்தினார். அதில் எதிர்க் கட்சித் தலைவராக அண்ணங்கராச்சார்யார் தேர்ந்தெடுக்கப்பட்டார். வேத சாஸ்திர நிபுணர்கள் இவர் திறல்கண்டு போற்றினர். ஸ்வரவைசித்திரியைக் கொண்டு வேதம் அபௌருஷேய மென்று இவர் அறுதியிட்டதும் குறிப்பிடத்தக்கது. வேத ஆராய்ச்சியை ஸ்வாமி இன்னமும் நிறுத்தவில்லை. இப்போது வேதஸ்வர பேத பரிசீலனையில் ஈடுபட்டுள்ளார்.

ஆசாரியர்கள் மிகவும் சிரமப்பட்டு திவ்யப்பிரபந்த வியாக்கியானங்களையும், ரஹஸ்ய கிரந்தங்களையும் பொக்கிஷமாக வைத்துவிட்டுப் போயுள்ளனர். அவற்றை

எல்லோருக்கும் எட்டும்படி எளிய தெளிய உரைகளை வெளியிடும் அவா அண்ணங்கராச்சாரியாரியாருக்கு அடி நாளிலிருந்தே இருந்து வந்தது. பொங்கும் ஆவலின் பரிசாக வெளிவந்தது, திவ்வியப்பிரபந்த திவ்யார்த்ததீபிகை. பழ வியாபாரிகளான கோவிந்தசாமி நாயுடு, கன்னைய நாயுடு வேண்டுகோளுக்கிணங்க இதையே விரிவாக அமைத்துதவினர். 1930ல் 3000 பாசுரங்கள் தீபிகையில் ஏறின. திருவாய்மொழி விரிவுரை வடநாட்டு யாத்திரையில் உருவெடுத்தது. ஸ்வாமியின் தெளிவுரைகளை வியந்து போற்றியவர்களில் மகா மகோபாத்யாய சாமிநாதையர், சேதுபதி சம்ஸ்தான வித்வான் ரா. ராகவய்யங்கார் குறிப்பிடத் தக்கவர்கள். "திவ்யப் பிரபந்தப் பேராசிரியர்" என்று ராகவய்யங்கார் பட்டம் சூட்டினர். மதுரை தமிழ்ச் சங்கத்தின் 'செந்தமிழ்'' பத்திராதிபர் திரு. நாராயண அய்யங்கார் "செந்தமிழ்ச் செல்வர்" என்று கொண்டாடினர்.

அண்ணாவின் வேத வேதாந்த பாடசாலை நிர்வாஹத்திற்கு நெருக்கடி நேர்ந்தது. சென்னையில் உபந்யாசங்கள் நடத்தி அதில் கிடைக்கும் வருமானத்தைக் கொண்டு பாடசாலையை பரிபாலித்து வந்தார். இதற்காகவே 1931ல் சென்னையில் உபந்யாச மஹா சபை ஏற்பட்டது. அந்நாளில் முன்னணி வக்கீல்களான எஸ் வரதாச்சாரியார், டி. ரங்காச்சாரியார், வெஸ்லி கல்லூரி பௌதிகப் பேராசிரியர் மஹரிஷி எஸ் வாசுதேவாச்சாரியார் போன்ற கற்றறிந்த பெரியோர்கள் உபந்யாஸங்களுக்கு வரலாயினர். எம். டி. (Bros.) சுதர்சனமய்யங்கார் ஸ்ரீமத் ராமாயணபிரவசனத்துக்கு ஏற்பாடு செய்தார். 256 உபந்யாஸங்களில் ராமாயணத்தை சென்னைவாசிகள் நம் அண்ணாவிடம் அனுபவித்தனர்.

வேதமே ராமாயணமாக உருவெடுத்து வந்தது என்ற கருத்தை வைத்து, ராமாயணத்தின் உள்பொருளை வெகு அழகாக சித்தரிப்பது ஸ்வாமியின் தனிச்சிறப்பு ஆகும். பகவத் கதா பிரசங்க சபையில் டிக்கெட் வைத்து அனுமதிக்கும் முறை இருந்து வந்தது. அதை மாற்ற திருவுள்ளம் கொண்டார் ஸ்வாமி; அதற்காக ஸத்காலக்ஷேப சபை ஒன்று (1956ல்) தோற்றுவிக்கப்பட்டது. இதன் தலைவராக நீண்டநாள் பணியாற்றினர் பிரபல வக்கீலும், ஜனசங்கத் தலைவருமான உபய வேதாந்தபுரம் ராஜகோபாலாச்சாரியார் ஆண்டுதோறும் மார்கழி மாதத்தில் திருப்பாவை காலட்சேபம் நெஞ்சை அள்ளும் நிகழ்ச்சியாக நடந்து வருகிறது.

காஞ்சியில் கிரந்தமாலா காரியாலயத்தை நிறுவி ஸ்ரீராமாநுஜன் என்ற மாத சஞ்சிகையை வெளியிட்டு வரலானர். திவ்வியபிரபந்த ஹிந்தி வியாக்யானங்களை இயற்றிவருகிறார். 1938ல் சந்நிதி வீதியில் நம்பிள்ளை சன்னிதியை ஸ்தாபித்தார். இதன் பரிபாலனத்துக் கென்றே சென்னபுரி ஆஸ்திக ஸ்ரீவைஷ்ணவ சமிதி அமைக்கப்பட்டது.

ஸ்வாமிக்கு ராஷ்டிரபதி வித்வத் சன்னது சூட்டியது மத்திய அரசாங்கத்துக்கு பெருமையூட்டும் நிகழ்ச்சியாகும். மணவாள மாமுனியின் குணாதிசயங்களை ஆஸ்திகர்கள் அனுபவிக்குமாறு இயற்றியிருக்கிறார். தரலஹ்ருத் என்று துவங்கும் சுலோகம் மறக்க முடியாத பொருள் பொதிந்துள்ளதாகும். தேவராஜனை சேவிச்

கிருர் ஸ்வாமி. உள்ளத்தில் மணவாள மாமுனியைப்பற்றிய நினைவோடு பெருமாளை சேவிப்பதாக சுலோகம்; வரவர முனிப் பெயரிலும் வரதன் பெயரிலும் வரம் பொதுவல்லவோ!

மணவாள மாமுனிக்கு நம் பெருமாள் சிஷ்யன்; முதற்பிரதிவாதிபயங்கரம் அண்ணவும் மணவாள மாமுனியின் சிஷ்யர். நம் பெருமாளும், அண்ணவும் ஒரு சாலை மாணுக்கராயினர். அத்தகைய குலத்துதித்த காஞ்சி மகாவித்வானுக்கு உள்ளத்தில் பெருமாளும் மாமுனியும் ஒருங்கே விளங்குவதில் வியப்பொன்றும் இல்லை. பெருமாளும் ஆசார்யனும் ஸ்வாமிக்கு ஆயுள் ஆரோக்கியம் செல்வங்களை அருள் செய்து, ஆஸ்திகப் பெருமக்கள் உய்ய நீடூழி வழிகாட்ட வேண்டுமென்று பிரார்த்திப்போமாக. ... ... ... ... *

---

ஸ்ரீ:

## பரமபக்தரொருவரின் கடிதம்

B. 326, M. P. T. Quarotrs,
Tondiarpet, Madras-81.
20—4—71.

ஸ்ரீ ஸ்வாமியின் சதாபிஷேக மஹோத்ஸவத்தின் வைபவங்கள் அடியேன் நெஞ்சில் நீங்காதனவாக உள்ளன. அருளிச்செயல் இன்னமும் செவிகளில் ஒலித்துக்கொண்டே யிருக்கின்றது. ஸ்வாமியின் வைபவங்களைத் தாங்கி வெளியிடப் பட்டுள்ள "ஸுதர்சனத்தின் சதாபிஷேக மலர்" அடியோங்களுக்கு நித்யபோக்யமாக உள்ளது. அம்மலரை அடியேன் கைப்பையிலேயே வைத்துக்கொண்டு ஒரு நாளைக்கு 4, 5 தடவைகளுக்குக் குறைவு படாமல் வாசித்து ஆத்மதிருப்தி அடைந்து வருகிறேன். ஆபீசிலும் மத்தியான்னம் இடைவேளையின்போது நேற்று வாசித்தபொழுது பேரின்ப வெள்ளம் பெற்றேன். ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சன பத்ராதிபரான வக்கீல் ஸ்வாமி உலகுக்குச் செய்துவரும் பேருதவிகளில் இது சிகரமானதென்று பலரும் புகழ்கின்றனர். அடியேன் அறிந்த அளவில் ஸ்ரீ உ. வே. சதாபிஷேகம் கோவிந்த நரஸிம்ஹாசார்யரின் வியாஸமே அடியேனுக்கு ஓவாத ஊணுக உள்ளது. அவைகளில் நெஞ்சையள்ளும் சில வாக்கியங்கள் கீழே யெடுத்துக்காட்டப்படுகின்றன.

"ஸ்வாமியின் வெளியீடுகளால் பெரியதொரு உபந்யாஸக ஸமூஹமே உருவாகியுள்ளது."

"ஸ்வாமி ஆப்தர்களுக்கு க்ருபை பண்ணும் ஸ்ரீமுகங்களை சேமித்து வைத்து அவைகளை அச்சிட்டால் ஒவ்வொருவருக்கும் கிடைக்கும் ஸ்ரீமுகங்களே ஒவ்வொரு விலக்ஷண க்ரந்தமாக அமையும்."

"இந்த எண்பது திருநக்ஷத்திரகாலத்தில் ஸ்வாமி எழுதி வெளியிட்டவைகளை அடுக்கினுல் காஞ்சியிலுள்ள ஸ்வாமியின் மூன்றடுக்கு திருமாளிகையின் உயரத்துக்குக் குறையாது."

"முக்கியமாக ஸ்வாமியின் உபந்யாஸங்கள் ஸ்வாநுபவ பரிவாஹரூபங்களாகவும் ஸ்வாபதேச ப்ரதாநங்களாயும் சாஸ்த்ரார்த்த கர்ப்பிதங்களாகவுமே அமைகிறபடியால் விஷயங்கள் கரைகட்டாக் காவேரியாய் ப்ரவஹிக்கும்போது அவைகளுக்கு ஒரு காலநியதியையோ விஷயநியதியையோ ஸ்வாமியால் கொள்ள முடிவதில்லை. கேட்பவர்களும் சலிப்பதேயில்லை."

"யாராவது ஆட்சேபகரமான விஷயமெழுதி வெளியிட்டால் அவர்கள் எழுதிய மை உலருவதற்குள் பதில் அச்சாகி அவர்களுக்கே கிடைத்துவிடும். ஆகையால் ஸ்வாமியின் விவாத நூலுக்குப் பதிலெழுதுபவர்கள் பலர் தாங்கள் எழுதியதைச் சில நாள் பதுக்கி வைத்துப் பார்த்து மகிழ்வர்கள்........இதுவரை ஸ்வாமி தாமே எழுதி அச்சிட்ட க்ரந்தங்களை ஒருவன் வேதநூல் பிராயம் நூற்றைப் பெற்ருலும் ஒரு தடவைகூட ஸமக்ரமாக வாசித்து முடிக்க முடியாது."

"த்வாதசோர்த்வ புண்ட்ரங்களும் திருமணித் தாவடமும் இல்லாமல் ஸ்வாமியை ஸேவிக்கவே முடியாது. இவர் அவதரிக்கும் போதே இவைகளுடனே அவதரித்தார் போலும்." ... ... ... .... *

இன்னும் எவ்வளவோ வாசகங்கள் சதாபிஷேக மலரில் அடியேனல் குறித்து வைக்கப்பட்டு அவ்வப்பொழுது வாசித்துக்கொண்டிருக்கிறேன். சதாபிஷேக மலர் ஒரு பெரிய பொக்கிஷம். ஸ்வாமியின் பெருமைகளை ஒன்றுவிடாமல் தன்னகத்தே கொண்டு அடியார்களுக்கு போக்யமாக வழங்கியுள்ளது

எல்லாவற்றையும் விட ஒரு முக்கியமான வாக்கியம்—அடியோங்களைப் புளகாங்கிதமடையச் செய்யுமது. அதுவும் சதாபிஷேகம் ஸ்வாமியெழுதியதே.

'பேரருளாளனை விடமாட்டாமையால்தான் நம் ஸ்வாமி நித்யவாஸத்தைக் காஞ்சியில் கொண்டார். வெளியில் பலநூறு மைல்கள் சென்றிருந்தாலும் பேரருளாளன் புறப்பாட்டை நினைத்து தாய் நினைந்த கன்றேயொக்க ஓடிவருவர்.''

மேற்படி வாக்கியத்தை வாசிக்கும் போதெல்லாம் அடியேனுக்கு ஆனந்த பாஷ்பம் பெருகுகிறது.

ஸ்ரீ பேரருளாளன் பெருந்தேவித் தாயார் திருவடிகளில் அடியோங்கள் பிரார்த்திக்கும் பிரார்த்தனை ஒன்றே ஒன்றுதான். நம் ஸ்வாமி பல்லாண்டு பல்லாண்டு எழுந்தருளியிருக்க வேணுமென்பதுதான். எம்பெருமானுரைப்போலே வையம் மன்னி வீற்றிருந்து அடியோங்களை உய்விக்க வேணுமென்று எம்பெருமான் திருவடித் தாமரைகளில் பிரார்த்தித்து நிற்கும் ஆயிரமாயிரம் தாஸர்களில் ஒருவன்.

அடியேன் மதுரகவி தாஸன்,
தி. அ. வே. வரததாஸன்

2—5—71 ஆனந்த விகடனில் வெளிவந்தது—

# புலமைக்குப் பெருவிழா

வட மொழியிலும் தமிழ் மொழியிலும் கரை காணாப் புலமையும், வேத சாஸ்திரங்களில் ஆழ்ந்த ஞானமும், பக்தி இலக்கியத்தில் ஆய்வுத்திறனும் ஆன்மிகச் சொற்பொழிவுகளை ஆற்றுவதில் தன்னிகரில்லாத் தனிச் சிறப்பும் பெற்றவர் 'ப்ரதிவாதி பயங்கரம்' ஸ்ரீ அண்ணங்கராச்சாரியார் சுவாமிகள். அண்மையில் அன்னாரின் எண்பதாவது வயது நிறைவை யொட்டி சென்னையிலும் ஒரு பாராட்டு விழா (11—4—71ல்) நடந்தது. திருவல்லிக்கேணி ஸ்ரீபார்த்தசாரதி சுவாமி சந்நிதியில் நடந்த இந்த விழாவிற்கு, ஸ்ரீமன் நாராயண ராமாநுஜ ஜீயர் தலைமை வகித்தார். திருப்பதி பெரிய ஜீயர் அவர்கள் உட்பட பல அறிஞர்கள் காஞ்சீபுர விழாவிலும் கலந்துகொண்டு, 'ஸ்ரீராமாநுஜர் போல 125 ஆண்டுகள் அண்ணங்கராச்சாரியார் வாழ வேண்டும்' என்று வாழ்த்தினர். விழாக் குழுவின் சார்பில் ஸ்ரீ அண்ணங்கராச்சாரியாருக்கு 8111 ரூபாய் அடங்கிய பண முடிப்பை, திரு. V. எம்பெருமானார் செட்டியார் வழங்கினார். ... ... ...



ஸ்ரீஉவே.

## K. கோபாலன் ஐயங்கார்

ஸ்ரீமான் கிடாம்பி கோபாலாசாரியரென்னுமிவர் ஆந்திர ப்ரதேசத்தில் (எண்டோமெண்டு) டிப்டி கமிஷனராக வளங்குபவர். நல்ல செல்வாக்குடையவர். நம் P.B A. ஸ்வாமிகளின் ஆந்திரபாஷா ப்ரசுரங்களுக்குப் பல வகைகளிலும் உதவிபுரிந்து வருபவர். நித்ய ஸ்ரீர் நிதயமங்களம்.

இப்படிக்கு,

**V. N. தேவநாதன்.**



ஸ்ரீ P. B. A. ஸ்வாமியால் ஏற்படுத்தப்பட்டுள்ள வேதபாராயண கோஷ்டியின் ஒரு பகுதி.



சென்னை மேலமாம்பலம் சங்கரமடத்தில் நேற்று மார்கழிமாத முடிவில் கூடின வித்வத்ஸபையில் ஸ்ரீ P. B. A. ஸ்வாமிகள் தம்முடைய ஸ்வரபேத ஸித்தாஞ்ஜன நூலை அரங்கேற்றம் செய்கிறார்.

Rgd. No. 2975 ஸ்ரீராமாநுஜன்

## P. B. அண்ணங்கராசார்ய ஸ்வாமிகளின் நூல் துறைகள்.



If un-delivered please return to:

**P. B. ANNANGARACHARYA,**
**KANCHEEPURAM-3.**

5—

437. Sri Vengeepuram Raghavacharya
Swami,
Melkote,
Mysore State.





Edited and Published by P. B. Annangaracharya Swami
for Madras Satgrantha Prakasana Sabha.

Printed by T. A. P. Srinivasavaradan at Sri Venkateswara Press,
Sannidhi Street, Kanchipuram-3.